உ
ஓம் கணேசாய நம:



# நாஞவாதக் சிவகட்டளை

## விளக்கச் செய்யுள்.

இஃது, கொழும்பு, ராம. அரு. அரு. கடைக் காரியம் (ராம)
இராமநாதபுரம் மஹா-ா-ா-ஸ்ரீ.
**கோ. ஷண்முக சுந்தரம் பிள்ளையவர்களும்,**
மாதம்பையில் அரிசி கொப்பரு வியாபாரஞ்செய்யும்
ஷை இராமநாதபுரம் ஜில்லா, குணங்குளம் மஹா-ா-ா-ஸ்ரீ.
**சோ. இராமசாமி பிள்ளையவர்களும்**
விரும்பிக்கேட்டுக்கொண்டபடி,

இராமநாதபுரம், வெளிப்பட்டினம்,
சித்தாயுள்வேத சிவராஜயோகி
மஹா-ா-ா-ஸ்ரீ. டாக்டர்
**ப. முனியாண்டி பிள்ளை**
அவர்களால் இயற்றப்பெற்று

மேற்படி மஹா-ா-ா-ஸ்ரீ.
கோ. ஷண்முக சுந்தரம் பிள்ளை
அவர்களால்,
கொழும்பு, செட்டித்தெரு,
"டயமண்ட்" அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பெற்றது.

இதன் விலை] 1923. [ரூபா 1-00.

உ

ஓம் கணேசாய நம:

84

# நாகுசிவவாதக்கட்டளை விளக்கச் செய்யுள்.

இஃது

இராமநாதபுரம் வெளிப்பட்டினம்

சித்தராசயுள்வேத சிவராஜயோகி

மஹா-ா-ா-ஸ்ரீ

டாக்டர் ப. முனியாண்டி பிள்ளை

அவர்களால் இயற்றப்பெற்று,

கொழும்பு,

ராம. அரு. அரு. ராம. கடைக் காரியம்

இராமநாதபுரம் வெளிப்பட்டணம்

மஹா-ா-ா-ஸ்ரீ.

கோ. ஷண்முக சுந்தரம் பிள்ளை

அவர்களால்

கொழும்பு, செட்டித்தெரு:

டயமன்ட் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

1923.

இதன் விலை] [ரூபா 1-00




உ
சிவமயம்.

# சாற்றுக் கவிகள்.

காரைக்குடி சதாவதானம், மஹா-ள-ள-ஸ்ரீ.
## வாலசுப்பிரமணிய ஐயரவர்களியற்றிய சாற்றுக் கவி.

தனியாநாஞசிவவாதக்கட்டளைவசனத்தைப்பாவாலே
முனியாண்டிமானயமாயுரைத்திடநான்முன்னின்றமுறையாலென்னை
முனியாண்டியெனவெணமின்சகிமின்பாலுரைத்தவப்பமுன்னீர்ப்பார்
அனைவோருமபார்த்துவப்பவறிவைவளர்த்திடுநூலொன்றமைத் [மேல்
[தான்மலனே.

திருச்சுழியல் வித்துவான், மஹா-ள-ள-ஸ்ரீ.
## மு. வீரவேல் பிள்ளையவர்களியற்றிய சாற்றுக்கவி.

ீரிலங்குதென்முகவைப்பதியிலங்கியருள்ஞானச்செல்வஞ்சேர்ந்து
ீபரிலங்குமுனியாண்டி பிள்ளையெனும் பண்புடையோன்பேரின்பத்தை
ாரிலங்கநாஞசிவவாதக்கட்டளைவசனநடையைநாளும்
ாரிலங்குசுருதியெனச்செய்புளினலலங்காரம்பகர்ந்தான்மாதோ.

இராமநாதபுரம் வெளிப்பட்டணம் ரயில்வே ஸ்டேஷன்
ஸ்ரீ-ல-ஸ்ரீ மஹாத்மா மௌனகுரு சுவாமிகள்
மடாலயக் காரியதரிசி
## மஹா-ள-ள-ஸ்ரீ. சு. முத்தையாபிள்ளை அவர்களியற்றிய நேரிசையாசிரியப்பா

க்திக்குநல்ல முடியென வேத-நற்றமிழ்முழங்கும் நாவலந்தீவில்
ர்கள்வாழுஞ் சீர்மிகுதெட்சணம்-அத்தலஞ்சார்ந்தவழகுறுஞ்சேது
யெனுமுகவைப் பண்புளதான-நிதிவெளிப்பட்டினம் நேருடன்வசிக்
னிக்குமாருபாலன்வைத்பம்-வழியுடனுணர்ந்தமாமுனியாண்டி(கும்

பிள்ளையாஞ்சாது பிரபலவித்துவான்-சள்ளையாஞ்சென்ம சாகரநீங்கத்
தன்னையறிசே ஷாத்திரிசிவனார்-நன்னயமுரைத்த ஞானசிவ
வாதக்கட்டளையை வளர்கவியாக-வோதினனாரொரு நூற்றவெண்பதே
பார்க்கவேஞானம்பதிபசுபாசம்-மார்க்கமும்விளங்கும்வளருநல்யோகம்
அத்துவிதத்தி னைக்கியநிலையை-மெத்தவிரிக்கும் வேதமேயொக்கும்
உற்றமுமூட்சுகளுக்கப்பாய்க்-கற்றிடநல்ல கதிதருநூலே.

---

யாழ்ப்பாணம்,

ஸ்ரீ-ல ஸ்ரீ. ஆறுமுகநாவலரவர்கள் பள்ளிக்கூடவுபாத்தியாயர்

ஸ்ரீ. தி. கிருஷ்ணம்பிள்ளையவர்கள் மாணாக்கர்

மஹா-ள-ள-ஸ்ரீ.

## அ. சோ. செல்வத்துரைபிள்ளையவர்களியற்றிய
## ஆசிரியவிருத்தம்.

---

சீர்பூத்த செங்கமல மலர்மாது தங்கிவளர்
தேசமதிலெவர்களுக்கும்
செப்பு மஞ்ஞானவிரு ணீங்கியறி வெய்தியே
சின்மயானந்தவடிவாஞ்
சிவபிரா னருளினைப் பெற்றுய்யும் வழியதைத்
தேருநூலாய்விளங்கும்
திவ்யஞானசிவ வாதக்கட்டளையை நற்செந்தமிழி
னிற்றெளிவதாய்

ஏர்பூத்த சொற்சுவை பொருட்சுவை நிரப்பியும்
இலக்கியமிலக்கணத்தோ
டெண்ணுதற் கருமைபெறு செய்யுளின் விளக்கம
தியற்றினாரென்னிலோ
இசையதே யுறுமிராமநாதபுர மென்றுலகி
லெண்சேதுபதிநகரினி
லின்புறு வெளிப்பட்டினங் கங்கை குலதிலக
னேதமில்சன்மார்க்கசீலன்

பார்பூத்த பழனிக்குமாரு பிள்ளைக்குநற் பாலனாய்
வந்துதித்தோன்
பட்சமொ டிரட்சிக்க வாங்கிலந் தமிழினுயர்
பாகங்களுடன் வைத்தியம்



பண்போடு கற்றுளோன் கம்ப ராமபணப்
பாடலின் பொருள்விரிப்போன்
பரணடியை யொருகணமு மறவாத விருதயப்
பாக்கியமதுடையநல்லோன்
பேர்பூத்த கல்விக்கழஞ்சியந் திரையுறு பெருங்கடல்
திறந்தவெள்ளம்
பெருமைபெறு கலைமக ளிருப்பிடங் கவிமாரி
பெய்திடுங்கருணைமேகம்
பேசிவைக ளோவெனப் பலகலைக ளாய்ந்துமறை
பெட்பொடுதெளிந்திபார்க்கும்
பிரியகுண மேருகிரி யெனவோங்கு முனியாண்டி
பிள்ளையாம்பெயருளானே.

---

எக்ககுடி கி மு. மஹா-ள-ள-ஸ்ரீ

வித்துவான்,

## ராம. ச. பொன்னுசாமி பிள்ளையவர்கள்
## இயற்றிய சாற்றுக்கவி.

அரும்பெரியகடலதனை யகஸ்தியன்றன் கமண்டலத்திலடைத்துக்காட் [டல்
பொருந்தவுஞானசிவவாதக்கட்டளைகவியாய்ப்புவியின்மீது
அருந்தவர்க்குமற்றோர்க்குஞ்செபந்தவமியோகஞானமறிவுங்காட்டித்
திருந்திடவேபாவலனன் முனியாண்டிமானபமாய்ச்செப்பினானே,

---

இராமநாதபுரம், எஸ். பி. ஜீ. மிஷன் ஹைஸ்கூலில்

தமிழ்ப் பண்டிதராயிருந்த

ஷெயூர் வடக்குத்தெரு, வித்துவான், மஹா-ள-ள-ஸ்ரீ.

## ப. சிவசாமி சேர்வையவர்களியற்றிய
## கவிகள்.

---

1. நலம்பழுத்தவளங்குலவுசேதுபதிதனிபாசில்நண்ணிவாழும்
குலம்பழுத்தகங்கைகுலன் குணம்பழுத்தகற்பகமாங்கோ இல்லாத
பலம்பழுத்ததவப்பேறும் பயன்பழுத்தபாக்கியனும்பாரிலியார்க்
வலம்பழுத்தவாயுர்வேதக்கடலின்வரம்புகண்டுவாழுந் [தும்
[தூயோன்;

2. வேதாந்தப்பாற்கடலைத்தோய்ந்துநவநீதமதாய்விரும்பயார்க்கும்
நாதாந்தந்தோய்நாஞசிவவாதக்சட்டளை இயைநன்றுய்ச்
சேதாம்பல்முகிழ்விரிக்குஞ்சேதுநந்நாட்டணிமுகவைசிறக்குமா
வேதாந்தியாயமுனியாண்டி தமிழ்க்கவியாலேவிளக்கினேனே. [யுர்

---

இராமநாதபுரம், இராஜா ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதரும்,
ஷை சமஸ்தானம் வித்துவான் மஹா-ா-ா-ஸ்ரீ தென்பாங்குக் கிருஷ்ணம்
பிள்ளையவர்கள் குமாரருமான மஹா-ா-ா-ஸ்ரீ
சிவஞானம்பிள்ளையவர்களியற்றிய
கவிகள்.

---

1, நீராருங்கடலாடைநிலமகட்குத்திலகமெனநிகழ்த்துபாண்டிப்
பேராருந்திருநாட்டிற்சைவமொடுவேதாந்தம்பிறங்காநின்ற
சீராருந்தமிழ்ப்பெருமையுடையவைகைபாய்வளஞ்சேர்சிறப்புற்றுய
பாராரும்புகழ்சேதுபதியரசுவதிமுகவைப்பதித்தலத்தில்;

2, கங்கைகுலத்தவதரித்தகாராளரிற்சிறந்தகலைகளாய்ந்தோன்
மங்கையர்கள்மடலாரும்வடிவழகன்வைத்தியந்தேர்மாண்பதுள்ளோ
பங்கமிலானற்பழனிக்குமரனருந்தவத்துதித்தபாலனுகிச்
சங்கையறவிலக்கியமுமிலக்கணமும்நன்காய்ந்ததமிழ்வல்லோனும்; [ன்

3. நன்னலஞ்சேர்முனியாண்டிபிள்ளையென்னுநாமமுள்ளோன்நல்லோர்
பன்னருநாஞசிவவாதக்சட்டளைதன்னைப்பாவாற்செய்தான் [வேண்டப்
சொன்னயமும்பொருணயமுமினிதுடையதகுதியுளதூய்மைநோக்கி
யொன்னலரும்புகழ்வரெனின்மற்றவர்கள்புகழ்ந்துரைத்தலுரைக்கற்
[பாற்றோ.

---

தெற்குத்தரவை, மௌனகுருசாமி மடாலயச் சித்தர்களி
லொருவராகிய மஹா-ா-ா-ஸ்ரீ.
மு. செல்லம்பிள்ளையவர்களியற்றிய கவி.

தவமோங்கு சேதுபதிநாட்டிலென்றும் தக்கபுகழெய்திடுதென்
முகவைதன்னில்
அவதாரபுருடனெனவந்துதித்த வறிஞன்முனியாண்டிபிள்ளை
யீசனன்பால்
சிவஞானசித்திதருநாஞசிவத் திகழ்வாதக்கட்டளையைக்கவிகளாக
நவமணிபோற்கோர்த்துரைத்தானுலகத்தோர்க்கு நல்லறிவுதுலங்
கிடவென்றுளுமாதோ.

உ
சிவமயம்.

# நூற்சிறப்புப் பாயிரம்.

இந்நூலாசிரியர் குமாரர்,
நற்குணானந்த சிவம்பிள்ளை இயற்றிய
நேரிசையாசிரியப்பா.

---

உலகுகங்கை-யோங்கநல்காற்றோ
டிலகாகாய-மென்பவைதம்மில்
நீரார்கடல்சூழ்-நிலமெனுமடந்தை
சீரார்சியாத்-திகழைரோப்பா
அமெரிக்காவோ-டாபிரிக்காவும்
இமவாசிட்டி-ரேலியாவென்ற
கண்டமைந்தாகக்-காண்பரப்புடைமை
கொண்டதேயெனினுங்-கூராசியாவே
பண்புளதாகும்-பரதநற்கண்டம்
திண்புவிபுகழுந்-திருமுகமதனிற்
றிராவிடப்பிறைநுதல்-செப்பிடுமுகவை
வருதிலகம்மதில்-வான்புவியெவையும்
புகழவாழ்மன்னன்-பொருந்தலர்வணங்கத்
திருந்தியசெங்கோற்-சேதுபதியாண்
டிருநதிடம்முகவை-யென்றவிராம
நாதபுரத்தில்-நலமார்மாட
வீதியதுள்ள-வெளிப்பட்டினத்தில்
நீதியாய்வாழ்வோன்-நிறைகுலங்கட்கு
ஆதியுமன்பு-மடையுங்கங்கை
குலத்தோன்பழனிக்-குமாருபிள்ளை
நலததாலுதித்தோன்-நன்முனியாண்டி
பிள்ளைதமிழில்-பிரபலனின்னும்
விள்ளுமவ்வூரில்-விளங்கவேகூடும்
கங்கைகுலத்துக்-கல்விச்சங்க
வங்கத்தலைவனு-மானோன்தன்னைப்
பலருமோட்சப்-பதத்தையடைய
நலமதளிக்குப்-நன்னெறியோடே

## தற்சிறப்புப் பாயிரம்

நாதனை விளக்கும்-நானுசிவ
வாதக்கட்டளை-வண்டமிழ்க்கவியால்
பூதலம்விளங்கப்-புகன்றுநீதாவென்
றுதாம்பெருகி-பமைவொடு முன்சொல்
சங்கத்தங்கத்-தவருட்புகழார்
பிங்கலன்கோபால்-பிள்ளை தவத்தால்
தோன்றியஷண்முக-சுந்தரம்பிள்ளையும்
நான்றகருமபொடு-நற்பலாகமுகு
விரும்புமவாழை-வெகுநெல்லோங்க
இருமபுனல்பாயு-மெழிலேமிகுந்த
குணங்நளமென்று-கூறுநகரில
குணங்கொள்சோலை-யழகெனுங்குரிசில்
தவச்சேயிராம-சாமிபிள்ளையும்
உவப்பொடுவேண்ட-வுள்ள மகிழ்ந்து
நன்றெனமுன்சொல்-நாவலனிசைந்து
தொன்றுள நூலின்-நெறு ர்பைவிடாது
எள்ளுதலின்றி-யிபற்றமிழ்தனுல்
துள்ளுகல்யப்தர்-துலங்கையாயிரம்
இருபத்துநாலோ-டிணங்குந்துந்துபி
வருடமதானி-மாசக்தேதி
இருபத்திரண்டி-லிசை குருவாரம்
திருவிருத்தப்பா-செப்பினன்கோடார்
குஞ்சரவதனன்-குரைகழல்
நெஞ்சினினுளும்-நினைந்துதானன்றே.





உ

ஓம் கணேசாய நம:

# நானு சிவ வாதக் கட்டளை

## விளக்கச் செய்யுள்.

### விநாயகர் துதி-வெண்பா.

1, தனிநானு சிவ வாதக் கட்டளைக்கிங்
இனிய கவிக ளியம்ப—நனிமும்
மதக்களிற்றன்செய்யமலர்ப்பதத்தை நெஞ்சிற்
றுதித்தேன் மலாற்சித்து

### நாமகள் துதி-கட்டளைக்கலித்துறை.

2. தத்துவத்தாற்றருநற்கதியைக்கொடுசாருநன்னூல்
பத்துமப்பெத்தம்விட்டுத்தமத்துற்றிடப்பாடலாக
வித்துவத்தைத்தருபொற்பினைக்கற்றிடவேட்கையோடு
புத்தகத்தைக்கைவைத்தநற்பதம்போற்றுவேனே.

### சிவத்துதி.

3. கங்கையோடிந்துசென்னியிற்சூடிக்களத்தினில்விடத்தினையிருத்திப்
பங்கயமலரோன்மாலுடன்றேடப்பந்தருஞ்சித்தருந்தவத்தோர்
ஐங்கரன்குமரனுமையவளருகிலமர்ந்திடமகிழ்வுடனிருக்குஞ்
சங்கரனமுழுமுதற்பொருளாந்தத்துவவிளக்கினைப்பணிவாம்.

### குருவணக்கம்.

4. பவமொழித்துமுத்திநெறியடைவதற்குப்
படர்ந்துள்ளவேதாந்தசித்தாந்தத்தை
நவமுடைத்தாம்பலகலைகளுணர்ந்துதேரா
நலமிலாரும்ஞானமெளிதிலெய்தத்

தவச்சேஷாத்திரிசிவனார்தந்தநானா
சீவவாதக்கட்டளையாநூலைச்
சிவம்படைத்ததமிழ்க்கவியாற்செப்பவர்தச்
சீர்ஞானகுருபதத்தைச்சிரம்வைப்பேனே;

5. கண்ணுக்குள்மணியானகாரணமாங்குருவைப்போற்றி
விண்ணுக்குள்ளாம்புவியில்வெகுகாலந்தானிருக்க
நண்ணிடைபின்கலைசுழினைநடுமுனையாம்வாசியோடு
கண்புருவத்திடைசெலதெண்டித்துநிதங்கருதவியோகம்.

## அவையடக்கம்.

6. தமிழினுக்கிருவர்கதியெனப்புலவர்சாற்றியதகைமையையுணரில்
அமையுநற்கவிகளுரைத்திந்தவுலகிலியாருமேநிகரில்லையென்னக்
கமைபெறுங்கங்கைகுலத்தினிலுதித்தகம்பனுங்கவிக்கரசோடு
சமமொடக்குலத்தினலம்பெறவளர்ந்துசார்திருவள்ளுவராகும்;

7. அப்பெரும்பெற்றியுடையருந்தத்தமரும்பெருநூலரங்கேற்றத்
தப்புகளொருவாறிருக்குமென்றெண்ணித்தாழ்வொடுபலரையும்விரு
ஒப்பமேகேட்டாரென்றிடிற்கல்வியுணர்விலாயான்கவிபாட [ம்பி
இப்புவிதன்னிற்றுணிந்திடலெறும்பேரிபத்தினைத்தாக்கிடலொக்கும்

## நூல்.

8. உலகமதிலேமறையாகமம்புராண
மோங்குமிதிகாசமுடனூல்களெல்லாம்
இலகுமதிநுட்பமொடுகற்றியார்க்கு
மிதையமெழுமையமதிலாதேபோக்கி
நலமளிக்குமௌனமெனும்ஞானமுற்ற
நற்சேஷாத்திரிசிவனார்பாதமென்றுங்
குலந்தழைக்கவணங்குமாணாக்கர்தம்முட்
குணமுடையோனொருவனெழுந்தேயன்னாளில்;

9. நாளெல்லாமனைவிமக்கள்பிழைப்பதற்கே
நாடெங்குந்திரிந்தலைந்துபொருளேதேடி
வாளணிமன்னவர்முதலாய்நீசர்காறு
மடந்தையர்பாலாசைவலைதன்னிற்சிக்கி



மீளவிலாதுலகதனிலழிதல்கண்டு
வெந்துயரம்பெருகென்மனக்கவலைநீக்கி
யாளநினையடிபணிந்தேனையாஞான
மானநிலைதனைவிளக்கியருள்வாய்நீயே;

10. நீயெனவுநானெனவுமிரண்டாய்ப்பேசும்
நினைவொழித்தாலதுதானேமுத்தியென்பர்
ஆயவழிதனையடையுஞ்சீடவர்க்க
மறைகருமமபத்திஞானம்மாமூன்றில்
தூயஞானம்முடையசீடாகேணீ
தொடர்நித்தாநித்தவத்துத்தேர்விவேகம்
மாயுமிகபரபோகநிராசையாறாய்
மன்சமையாதிக்குணங்கள்முத்தியிச்சை;

11. சமைதமையேதிதிக்கையுபரதிசிரத்தை
சமாதியெனுமறுகுணங்கள்விரித்துரைக்கிற்
சமைதானேயுட்கரணமடக்கலென்பர்
தமைபுரத்தின்கருவிகளின்றண்டமாகும்
மமதைமிகுகாமாதியிச்சைநீக்கல்
வருதிதிக்கைகருமங்களனைத்தையுந்தான்
சுமையெனவேவிடுதலுபரதிநாலோடே
தொழுங்குருமேலன்புவைத்தலேசிரத்தை;

12. சமாதிகுருமொழிமனதினிறுத்தலாமிச்
சாதனசதுட்டையத்தைத்தான்கைக்கொண்டு
அமையுமிந்தத்தேகமுள்ளேயாடுந்தேகி
யாதாமோவெனவறியத்தத்துவங்கள்
சமமுறவேயொவ்வொன்றாய்க்களைந்துதள்ளிச்
சாருமுத்திமானிடர்கடாம்பெறற்கே
உமையவட்குச்சிவன்முன்னாள்மகிழ்ந்துசீடா
வுரைத்தவுபதேசமீதுணர்நீயென்றே;

13. நன்றானசாதனங்களுடையசீடா
நானிலத்தினிட்காமகருமந்தானே
நின்றாடுமலமென்னும்பாவம்போக்கும்
நேரீசனுபாசனைவிட்சேபமென்னு

மொன்றுகாமனவிருத்திதன்னைநீக்கு
முற்றசொரூபாவரணமென்னுமான்மத்
தின்றுபிரமவ்வடிவமறியாத்தன்மை
துலங்குமகாவாக்கியத்தின்பொருளாற்றோற்றும்;

14. தோற்றத்தியாரோபமபவாதத்தாற்
றொடுபந்தம்வீடென்னுங்கிரமந்தன்னைச்
சாற்றனான்ம்வ்விருத்தியொழித்துஞானந்
தனைவிளக்கவுபநிடதம்பிரம்கீதை
ஆற்றலுளகுருவருளாலறிந்தேயானு
மனுபவித்தநாமரூபம்மிலாத
நாற்றிசையும்புகழ்பிரமசைதன்னியத்தி
னவிலுலகமுதித்தவகைநாட்டக்கேளாய்;

## விஷய அவதாரிகை.

ஆன்மவடிவ சிவஉபாதியின் ஐவகையாய் விளங்கலைக் கூறல்.

(1) வேறு.

15. தத்துவமெய்ப்பொருளொடுசெம்பொருளுளதாம்மனவுரைசெய் [சாதுவான்ம
வத்தைந்துவடிவாயுபாதியினால்விளங்குவனதவழுத்தக்கேளாய்
சுத்தப்பிரமஞ்சருவசாட்சியிற்றீச்சூடேபோற்றொடரபின்னச்
சத்தியுதித்ததிதபிரமத்தடங்கிற்றான்சுத்தப்பிரமநாமம்;

16. பேரோங்குபிரமத்தைச்சத்திவிசிரிம்பித்துப்பெருமைபெற்றால்
பாரோதுபரைக்கடக்கமாகுதலாற்பரப்பிரமநாமம்பற்றும்
நேருமிதில்வருசுத்தப்பிரமமொடுகிதிசருவசாட்சிசத்தி
சீரதீதப்பிரமம்பரைபரப்பிரமவிபாஞ்செப்புவேனே.

## சுத்தப்பிரமம்-சருவசாட்சி விபரம்.

17. ஒன்றசங்கமகண்டமதிரிசியநாமம்ரூபமுதித்தலந்தம்
இன்றியொன்றும்வியாபியாவியாபகமாயிலங்கதுசுத்தப்பிரம்மம்
இன்றென்னுமாயைதனிற்றோன்றுதிரிபுடிவிளங்கவியற்றிப்பின்பு
தன்றிசழ்ஞானத்தாற்சம்பந்தமறைப்பற்றதுவேசருவசாட்சி.



## சத்தி-விபரம்.

18. சத்திசுதந்தரமின்றிப்பிரகிருதியெனுநாமந்தன்னைப்பெற்றுச்
சத்தனெனும்பிரமத்தில்வேறுபடாததுவாகித்தங்கலாலே
சித்தெனுமக்கினிச்சூடேபோற்பிரமசன்னிதியில்ஜெகப்படைக்க
நத்துவிசித்திரமாகத்தோன்றுமதீதப்பிரமம்நவிலக்கேளாய்.

## அதீதப் பிரமம்.

19. மனவாக்காலறியொண்ணாக்காரணகாரியரகிதமாண்பதாகி
யினமறியாப் பிரகிருதியெனுஞ்சத்திதனையடக்கியிருத்தனோக்கிற்
கனப்பழுதையிற்பாம்பைக்கற்பிக்குஞ்சத்தியுற்றங்கிருத்தலொக்கு
மெனப்புகலச்சேதனமாம்பொருளென்றேநூலுணர்ந்தோரியம்பு [வாரே.

## பரை.

20. நாமரூபவ்வடிவையெப்பொருட்குநாட்டாதிக்காரணத்தால்
ஏமமகாமாயைபிரகிருதிசத்தியென்றுரைக்குமூலாவித்தை
சேமமதாஞ்சுத்தப்பிரமந்தன்னில்வெளியாய்வியாபித்தேதான்
தூமமெனமூடப்பராசத்திதன்னுபரையென்பரன்றே.

## பரப்பிரமம்.

21. வருசுத்தப்பிரமத்திற்கற்பனையாய்மருவுபிரகிருதிநின்று
பெருவுலககாரணமாய்வெளிப்பட்டவவசரத்தப்பிரமந்தானே
யுரியதொருகாரணமாமென்பரதைக்கற்பிதமாயோங்குகின்ற
பராசத்திவிசிருகையிற்காரியமாம்பரப்பிரமமென்றுபேராம்;

22(2" மன்னுமடவார்புருடர்தமைக்கூடிமகிழ்ந்தின்பமடைவதேபோல்
முன்புகலிலட்சணமேசூனியமாஞ்சத்திக்குமுதலாம்வஸ்து
சன்னிதியிலவிகிருதசத்வரசதமகுணங்கடாமுண்டாகும்
மின்னுதுய்யசத்துவத்திற்கானந்தரூபசத்திவிளங்கும்பேரே;

23. தெரிசுத்தரசசுசித்துரூபசத்தியென்றுபேர்செப்பநிற்கும
தருசுத்ததமசுசத்துரூபசத்தியாகுமெனச்சாற்றலாகும்
வருநிமித்தவானந்தரூபசத்திதனைக்கூடிமகிழ்வதாகி
யுருவார்சர்வானந்தச்சுழுத்திதனைப்பரப்பிரமமுற்றபோது;

24. பரமானந்தன்பேர்வாய்த்திடநிற்கும்பின்பந்தப்பரமானந்தன்
பரையிலுதிசித்துரூபச்சத்திதனைக்கூடிப்பகருஞ்சர்வப்
பிரகாசமெனுங்கனவவத்தைதனையடைந்திடவப்பேரைவிட்டுப்
பரவுபரிபூரணரெனுமமதையுலகறியப்படைத்தேயோங்கும்

25. சாற்றுபரிபூரணருஞ்சத்துரூபச்சத்திதன்னைக்கூடிப்
போற்றுசர்வவியாபகமெனனவுதனைப்பொருந்தும்போதப்பேர்
[போக்கித்
தோற்றுபரனெனுநாமமடையுமினிப்பதவிளக்கந்துலங்கச்சொல்
ஆற்றலுடன்சீடாநீகேட்டுமனதடைகவலையகற்றுவாயே. [வேன்

## இலட்சணம்-விபரம்

26. இலட்சணமென்பதுசொருபவுபதடத்தமூன்றென்னவியம்பநிற்கு
நிலத்திற்றீசூடுடைமைபோலென்றுங்குறியுளதேநேர்சொரூபம்
கலத்தலுடைமற்றிரண்டுநாமமுளனென்பதைப்போற்கருதலாகும்
பலப்பரைசத்தசத்தில்லாவிலட்சணசூனியமென்னும்பண்பைக்
[கேளாய்

## இலட்சண சூனியம்-விபரம்

27. அனிர்வசனீயம்மித்தைசதசத்துவிலட்சணமென்றறையச்சத்தி
செனிமயக்கக்காலமிருந்தின்றும்விசாரித்துத்தெளியுங்காலம்
தனிபிரமமலடிமகன்போலென்றுமுளதிலதாந்தன்மையாலே
வினவுசத்தசத்திலதுவேறுபடுமெனவுலகுவிளம்புமன்றே.

## பராசத்தியின் சத்துவாதிகுணவிபரம்

28. மாறுதலிலாதசுத்தமூன்றுகுணங்களிலொன்றுமாண்புடைத்தாய்ப்
பேறுபெறில்நெருஞ்சியின்முள்ளிருகூறுகீழூந்திப்பிரிவுற்றே
கூறுயாநிற்பதுபோல்நிற்குமதற்கக்குணப்பேர்கூறநிற்கும் [யோர்
ஆறுங்கேவலசகலகாரணமானந்தருபசத்தியாமே.

## பரமானந்தர்சித்துரூபசத்தி-பரிபூரணர்-விபரம்

29. எல்லையிலானந்தவடிவடைந்ததியம்பிடுபரமானந்தரென்பர்
செல்லுதலிற்பேர்வடிவைத்தேற்றுவிக்குமதுசித்துரூபசத்தி
எல்லிலொளிர்கனவதனைப்பெறுபரிபூரணர்கடமண்ணிடைவிடாம
நல்லுருவைப்பெற்றதுபோலெப்பொருளினடுவினிறைந்திருப் [ல்
[பர் நன்றே.



## சத்துருப சத்தி-பரன்-விபரம்

30, சடசத்துசாவாதார்நாமமுடன்ரூபநிசமென்னச்சாற்றந்
திடமுளதுசத்துரூபச்சத்திபரனவனிடத்தேயுள்ள
திடதத்துவங்களில்மேலாய்விளங்குஞ்செப்புசத்திநான்குதம்மிற்
படர்பிரமமாகாரணச்சடம்பராசத்தியென்பர்பாரே;

31. காரணசூட்சுமதூலவுடம்பைமுறையேபிரமங்கருதிநிற்கும்
சீராமானந்தரூபச்சத்திசித்துருபச்சத்திதேர்ந்த
நேருசத்துரூபசத்தியிவைகளின்பால்நீதியதட்பிரமத்திற்குக்
கூறுதனுவின்றாகுங்கற்பனையாற்சரீரமதுகூடிற்றன்றே;

32, பிரமான்மவடிவசிவங்கற்பனையாலேவகையாய்ப்பிரிவுற்றோங்கிப்
பரையினிமித்தஞ்சுத்தப்பிரமம்பரப்பிரமம்பரமானந்தர்
பரிபூரணன்பரனும்பேர்களையேபற்றுமினிப்பரவுமூலப்
பிரகிருதித்தோற்றத்திலீசுவரன்றோற்றத்தைப்பேசுவோமே.

## மூலப்பிரகிருதித்தோற்றத்திலீசுவரன்றோற்றங்கூறல்

33,(3)பெருமகண்டபரிபூரணச்சச்சிதானந்தப்பிரமந்தன்னில்
வருமூலப்பிரகிருதிச்சத்திதனில்வயங்குசுத்திரசிதம்போல
உருவாகும்விகிர்தமுடன்முக்குணங்களோங்கதிற்சத்துவமேமா
சருவஞ்ஞோபாதியுடனீசுரகாரணசரீரந்தானென்பாரே. [யை

## ஈசுவரன்

34. பிரமமதுமாயைதனில்நின்மலசலப்பிரதிபிம்பம்போல
பிரதிபிம்பஞ்சலட்சணமாய்க்காட்டந்தச்சைதன்யபிம்பந்தன்னைச்
சருவஞ்ஞராமீசுவரனென்றுசாதுக்கள்தாமுரைப்பார்
கருதுமிதில்வரும்பதங்கள்பொருள்விளங்கக்கழறலினிக்காண்பா
[ய்நீயே.

## அகண்டம்-சத்து-சித்து-விபரம்

35, நித்தியமாமுற்பத்திநாசமிலாவகண்டத்தைநியதிக்காலம் [கள்
உற்றவிடம்பொருள்களினால்வேறுபடுத்தக்கூடாவொன்றென்பார்
சத்துமுக்காலத்துள்ளதாகும்பின்சாற்றெந்தப்பொருளையுந்தான்
சித்துமுக்காலத்தறிந்துந்தானவற்றாற்றெரியொண்ணாப்பொருளா
[மென்பர்.

## ஆனந்தம் மூலப்பிரகிருதி-விபரம்

36. விரிமூன்றுகாலத்துமானந்தம்பிரியத்தின் விடயமாகும்
திரிமூலப்பிரகிருதியுலகமுதற்காரணமாய்ச்செப்பநிற்கும்
பிரசத்துவக்குணமாங்கிருவிரசகுணமாகும்பேசுங்காலைப்
பிரகிருதிதனின்றிஃகான்றமகுணமாம்பின்பதற்குச் சமயம்பற்றி

37. அவித்தைசத்திமூலைசுத்மையோனிதமந்தூலையஜையவ்வியக்தம்
அவிபாகிருதந்துச்சையஞ்ஞானமனிர்வசனீயையதாகும்
கவிவெண்மைசெம்மையொடுகருமைநூலாற்றிரித்தகயிறுமென்னு
முவமைமுக்குணங்கலந்துபிரளயமாசுழுத்தியென்றுரைப்ப
[தாமல;

## மாயை-உபாதி-ஈசுவரகாரணசரீரம்-விபரம்

38 விகுர்தமாறுதல்மாயையெனலுத்தியொடுசிந்தைவிருத்திக்கெட்டா
தகைமையோடுண்மையிலிலாததுவுமென்றுலகுசாற்றநிற்கும் [த்
வெகுவிதமாயொருபொருளைவிளங்கச்செய்காரணமுபாதியென்பர்
மகிழீசுவரன்காரணவுடப்பவ்வியாகிருதமாயைபோம்;

39. பிரகிருதியின்சத்துவக்குணமாமாயையதுபிறங்கீசற்குச்
சருவஞ்ஞவுபாதியுங்காரணமாயுமிருக்குமதுதவிர்ந்தபோது
பிரமவடிவாயீசனிருப்பதன்றிவேறுருவம்பெறுவதின்றால்
வருமனவகளைச்சொலிற்சர்வஞ்ஞத்துவஞ் சருவேசுவரத்துவ்வம்;

40. சருவநியந்திருத்துவஞ்சர்வாந்திரியாமித்துவஞ்சர்வகர்த்துருத்வம்
சருவசக்திமத்துவமாரும்விரிக்கில்மாறின்றிச்சகலத்தையும்
திரிகாலமும்மறிதல்பிரபஞ்சத்தலைவனெனத்தெரியநிற்றல்
பொருளெவைகளையுநியமந்தனினிறுத்தலவைகளுக்குட்பொருந்
[திநிற்றல்

41. சகலகாரியங்களுக்குங்கருத்தாவாயிருத்தலொடுதவறுதென்றும்
வெகுவிதசாமர்த்தியமுமுடைமையெனவிளம்பொன்றுமுதலாறுக்
தகுதியுளபொருளாகும்பிரமமிவைதமிற்பிரதிபலித்துநின்று [குர்
பகற்றெளிசலத்தினொளிர்பான்மைபோலீசனெனும்பண்புற்றோங்
[கும்



## ஈசுவரனின் சூக்குமதூல சரீரங்களின் விபரம்.

42. முன்னிரணியகருப்பம்விராட்டென்றுமுறைமையுடனீசுரற்கு
நன்னயசூக்குமதூலசரீரங்கள்காரணமாய்நடத்தலாலே
துன்னீசுவரகாரணச்சரீரமாயையதாய்த்தோன்றிநிற்கும்
இன்மாயைசேதனம்பிம்பாபாசமிமமூன்றுமீசனுமே.

### அவதாரிகை

மூலப்பிரகிருதியின்சத்துவகுணமாயையிலுண்டான சத்துவாதிகுணங்களினால்
ஈசுவரன் மும்மூர்த்தங்கொண்ட தன்மைகூறல்.

43. (4) கோலமுறுமீசுவரன்சத்துவாதி
குணங்களினால்மும்மூர்த்தங்கொண்டதன்மை
சாலவுமேயுரைப்பதுகேள்சாத்துமீகந்
தருமாயைதனில்மூன்றுகுணமுதிக்கும்
சீலமிகுசத்துவததில்சாத்துமீகம்
சிறக்கவதிற்றோன்றீசன்ஜெகத்தைக்காக்க
மாலென்றபேருளனுய்வயங்கிநிற்பன்
மற்றந்தச்சத்துவத்திலிராசதந்தான்;

44. பிரதானமாம்போதுபிம்பித்தீசன்
பிரபஞ்சஞ்சிருஷ்டிக்கப்பிரமனுவன்
பெருமைபெறுஞ்சத்துவத்திற்றுமசந்தான்
பிரதானமாம்போதுபிமபவீசன்
உருத்திரனெனுநாமம்பெறுவனிந்த
வுலகத்தின் சங்காரத்தொழிலாலமைந்த
ஒருவனின்முத்தொழிலிவையாஞ்சீவபேத
வுற்பத்திவிபரமினியுரைக்கக்கேளாய்.

### அவதாரிகை

மூலப்பிரகிருதியின்ரசகுணத்திலிருந்து ஜீவர்களின்றோற்றமும்பேதமுங்கூறல்.

45. (5) கருமூலப்பிரகிருதிரசகுணந்தான்
காணுபலரூபமொடுபிரிந்துதோன்றித்
தரியவித்தைசீவகாரணசரீரந்
தானாகுமொன்றொடொன்றுதகுதியின்றி

வருமவற் றுட்சைதன்னியபிரதிபிம்பம்
மலினசலச்சூரியன்போற்றோற்றிநின்று
பிராஞ்ஞ சிதாபாசகிஞ்சிஞ்ஞர்களென்னும்
பேர்களையேபெற்றோங்கிப்பிரகாசிக்கும்

46. இயம்பவித்தைதன்னிடத்தில்முதற்குணம்ரேபா
விராசதத்திற்சத்வரசதமகுணங்கள்
சுயம்படவேதோன்றுமதிலொன்றொன்றேதான்
தொடர்ந்துபிரதானமதாமுறையேசிவன்
வயம்பிரதிபிம்பித்துத்தத்வஞான
வான்காமக்குரோதபரகன்மனிட்டன்
கபஞ்சோம்பல்நித்திரையுமயக்கமோடு
கழறுமநாசாரமிவையுடையனுவன்

### அவித்தை-மலினஜலம்-கிஞ்சிஞ்ஞர்,சிதாபாசர், பிராஞ்ஞர் இவைகளின் விபரம்.

47. வித்தையெனுந்தத்துவஞானத்தினாலே
விலகிநசிப்பதுதன்னைய ..த்தையென்பர்
மூற்றுயிர்ச்சூக்குமதூலசரீரங்கட்கு
முதலவித்தைகாரணமாய்மொழிபலாகும்
வத்தழுக்குப்படிதண்ணீர்மலினநீராம
வருகிஞ்சிஞ்ஞரேயற்பவறிவோராயர்
சித்துப்போல்விளங்குபவர்சித்தாபாசர்
தெரியுபிராஞ்ஞரேநன்றுபறிவோராமே,

### தத்துவஞானி- கன்மநிட்டன்- சீவன்.

48. சமாதிநிட்டையுடையவன்றத்துவனும்ஞானி
சாற்றுவிருப்பொடுவெறுப்பாலாங்குணங்கள்
தமையடைந்துகாமக்குரோதமுற்றுச்
சாதிப்பற்றுள்ளவனேகன்மநிட்டன்
சமவந்தக்கரணங்கள்சிவனத்தைத்
தள்ளவித்தையொடுபற்றித்தங்கலாலே
கமைசீவனும் அவித்தைசேதனம்முங்
கருதாபாசஞ்சேர்ந்துஞ்சீவனுமே.



### சீவேசுரர்களநாதியெனல்.

49. அதிதசுத்தப்பிரமத்தையஞ்ஞானந்தா
னனாதிதொட்டுச்சமபந்தமுள்ளதாகும்
துதியதினாற்சீவேசபாவந்தாமுஞ்
சொல்லுமனாதியஞ்ஞானமொழிந்தபோது
விதிசொருப்மற்றுப்போமதுவரைக்கும்
விளங்குமவையுலகதிலனாதியென்றே
மதிசீவேசுரபாவமஞ்ஞானத்தின்
வசமிருத்தலாலதன்காரியங்களென்பர்.

### அவதாரிகை.

மூலப்பிரகிருதிதமகுணம்,ஆவரணம்விட்சேபமென்றிரண்டாதல்
ஆவணரத்தின் றன்மைகூறல்.

50. இனிமூலப்பிரகிருதிதமகுணந்தா
னிரண்டாமாவரணம்விட்சேபசத்தி
யெனுமிவற்றுளாவரணசத்திஞானி
யீசனிவர்தவிரமற்றைச்சீவர்க்கெல்லாம்
தனுத்திரையமோடுசிதாபாசன்சாட்சி
சைஇதன்யபேதங்கடெரியோட்டாமல்
நனியிருபத்தென்பதுதத்துவங்கடம்மை
நானென்றபிமானித்திருக்கச்செய்யும்.

51. ஒற்றுமையாமிவ்வபிமானந்தனக்கிங்
குறுமகங்காரக்கிரந்திகுடும்பபந்தம்
பெற்றுடையதெனவுரைப்பர்குருவின்றீட்சைப்
பொருளாலாவரணப்பிடிப்புநீங்கி
மற்றிருபத்தொன்பதுதத்துவங்களுக்குள்
வருபேதாபேதமறிவதுவேமுத்தி
யுற்றிடுமாவரணசத்திகாரியமதீதோங்கிதிலாம்
பதப்பொருளையுரைக்கக்கேட்பாய்.

### பிரகிருதி, ஆவரணம், விட்சேபம் இவைகளின் விபரம்.

52. ஆவரணவிட்சேபசத்திதங்க
ளனாதிபவரூபப்ரகிருதிதானே

பாவரூபப்பதார்த்தம்மஞ்ஞானம்
பற்றுதிசைதனிலதுதானுள்ளதைப்போல்
மேவுலககாரணமாய்த்தெரியநிற்கும்
விசாரணையிற்பொய்யாகவேவிளங்கும்
ஆவரணமறைப்பாம்விட்சேபந்தோற்ற
மறிஞானியீசுவரன்றன்மைகேளாய்.

### ஈசுரன்-ஞானி சரீரத்திரையம்-விபரம்.

53. ஈசுரற்குப்பிராந்தியியல்பாகவின்று
மெழில்ஞானிகுருவருளால்மலவிட்சேபம்
நாசமதாய்ச்சமாதியிணைக்கூடியென்றும்
நாடுந்தன்சொருபமறைப்பற்றேநிற்பன்
விசிச்சிரணமுறலாற்சரீரமென்றும்
வெந்திடுதலாற்றேகமெனவுமான
பாசவுடற்றிரையங்காரணமதோடு
பகருஞ்சூட்சுமதூலமாகுமன்றே.

### இருபத்தொன்பது தத்துவம்.

54. பதார்ததமெனும்பொருடருதத்துவமிரண்டு
பத்தொன்பதவையிலொன்றவத்தைமுன்றும்
மதிசாட்சிகூடத்தன்பிரமமென்று
வயங்கிவிசாரணைமுகத்துத்தானய்த்தோன்றும்
விதிதூலதத்துவங்களாறுஞ்சூட்சம்
விளங்கிருபதவித்தையொன்றுபிம்பசிவன்
சதிபிருபத்தெட்டும்விசாரணைமுகத்துத
தனக்கன்யமயக்கத்திற்றனய்த்தோன்றும்.

### அகங்காரக்கிரந்தி- சம்சாரபந்தம்- சற்குரு

55. தானல்லாச்சடம்நானென்றறிவுகொள்ள
றணையகங்காரக்கிரந்தியென்பர்நல்லோர்
நானுடலாமென்னலகங்காரமாகும்
நவில்கிரந்திமுடிச்சென்னும்பொருளாய்நிற்கும்
பானேக்குஞ்சேய்மனைவிபொருளைச்சொந்தம்
பாராட்டிநிற்பதுசம்சாரபந்தம்
வானஞ்சத்துபதேசஞ்செய்வோன்றன்னை
வளருநல்லாத்துமஞானகுருவாமென்பர்



### முத்தி.

### பாரமார்த்திகச்சத்து-வியவகாரிகச்சத்து-பிராதிபாசிகச்சத்து.

56. உயிர்தனதுமருள்மயக்கவிபரீதத்தி
னுணர்வவிச்சைகுருவருளானீங்கியேதன்
செயிரிலெதார்த்தவ்வடிவப்பிரமமாகத்
தெளிவடைந்துநிற்றலதுமுத்தியென்பர்
மயலகல்முக்காலத்தும்பொய்தானென்று
மதித்தறிதல்பாரமார்த்திகச்சத்தாம
வியவகாரிகம்ஞானத்தால்விளங்கும்
விரிபிராதிபாசிகமஞ்ஞானத்தும்மாம்;

### ஷை சத்துகளின் விளக்கம்.

57. பாரமார்த்திகச்சத்துப்பிரமமென்பர்
பகர்மாயையோடதிலாமுலகுந்தானே
தேர்வியவகாரிகச்சத்தென்றுசொலவர்
தெரிகட்டையிற்கள்ளன்பழுதைப்பாம்பு
பிராதிபாசிகச்சத்தாந்தாமசத்திற்
பிரிந்தானவிட்சேபச்சத்தியைக்கேள்
நேரீசுவரன்சீவர்கருமமொட்டி
நிகழ்போகமனுபவிக்குஞ்சிருஷ்டிசெய்ய.

### அ-கை. விட்சேபசத்தியின் றன்மைகூறல்.

58. சொல்லும்விட்சேபசத்திசத்தமோடு
சூட்சுமவாகாசமதாமதிலிருந்து
செல்லுஞ்சூட்சுமவாயுபரிசமோடே
ஜெனிக்குமதில்ரூபகுணச்சூட்சத்தேயு
நலலொளிவுகொடுபிறக்குமதிலிருந்து
நாடுரசகுணச்சூட்சவப்புத்தோன்றும்
சில்லென்னுமதிலிருந்துகந்தமுள்ள
சிறந்தசூட்சுமப்பிருதிவதுதானுண்டாம்;

59. தாவுதல்செய்விட்சேபத்தமகுணத்திற்
சத்துவம்ராசதந்தமசுமூன்றுமாதி
மேவுகருவற்பமுடனுள்ளதாமே
விரிபூதமைந்துமதைவிடாமனின்று
ஆவதுமுக்குணபூதம்பஞ்சபூத
மபஞ்சிகிருதப்பூதமென்றும்பின்னும்
பூவுறுதன்மாத்திரைகள்சூட்சுமத்தின்
பூதங்களென்றும்பேர்பூண்டேயோங்கும்.

### அந்தக்கரணத்தின்றன்மைகூறல்.

60. (8) இந்தவிதத்தாகும்பூதங்களின்க
ணியையுஞ்சூட்சுமசரிரந்தூலபூதம்
வந்துபிறந்தனவகைதான்யாதோவென்னில்
வானாதிபூதசத்துவாமிசத்தில்
முந்துதன்மாத்திரைக்கொருமாத்திரையெடுத்து
மொத்தமொன்றாய்க்கூட்டவந்தக்கரணமாகும்
அந்தவந்தக்கரணமதிலாகாசம்ச
மடைந்திருப்பதாலதுபோற்கேள்விக்கெல்லாம்

61. இடங்கொடுத்துத்தரிதநிடுமவ்விருத்திக்குத்தா
னியங்குள்ளமென்றுபேராகும்பின்னும்
திடவாயுவம்சமதுகூடிநின்று
திரியும்விருத்திக்குமனமென்றுபேராம்
வடவனலினம்சமதின்கலப்பால்வத்து
வகைவிளங்கச்செய்விருத்திபுத்தியென்பர்
சடவப்பினம்சமதுகலந்திருந்து
காண்விடயமறிவிருத்திசித்தமாகும்.

62. பிருதிவியினம்சமந்தக்கரணமுற்றுப்
பிரியவபிமானஞ்செய்விருத்திக்கென்றும்
விரவுமகங்காரம்பேரிதிற்பதங்கள்
விளக்கிற்சூட்சுமசரிரவிபாஞ்சொல்வேன்
விரிதூலசரீரம்போற்றோன்றலின்றி
மேலாஞ்சூட்சுமபூததத்துத்துஞானேந்
திரியமந்தக்கரணங்கன்மேந்திரீயந்
தெரிவாயுமிவைசமுதாயததாலாகும்.

### சூட்சும சரீரம்-அந்தக்கரணம்.

63. நுண்ணுடம்பிலிங்கவுடலருவுடம்பு
நுவலுஞ்சூட்சுமவுடம்பாம்பேர்களுற்று
வண்மைசுகதுக்கவடிவனுபோகங்கள்
மந்தவந்தப்படுத்துவங்கள்மருவிநிற்கும்
எண்ணுமனம்புத்தியாங்காரஞ்சித்த
மெழுமுள்ளச்சமுதயமானதென்றும்
தண்ணார்சூட்சுமபூதச்சத்துவத்தின்
சமட்டியந்தக்கரணமுமாய்ச்சாற்றுவாரே



### அந்தக்கரணங்களின்தேவதை-தானம்

64. சத்துவமுட்கருவியெனுங்கரணமைந்தின்
றந்திரிவாய்பரிணமம்விருத்தியென்பார்
பத்துளமேதேயுசுசதாசிவன்றான்
பகாதிதேவதைதானமுச்சியாகும்
தத்துமனத்தின்றானங்கண்டமாகுந்
சந்திரனேயதற்குத்தேவதையாமென்பர்
புத்திக்குப்பிரமன்றேவதையேதானம்
பொருந்திதையஞ்சித்தத்திற்கவைமானபி;

65. அகங்காரத்திற்கிடஞ்சர்வாங்கமென்ப
ரதிதேவதையுருத்திரன்றானுகுந்
தொகுமந்தக்கரணங்கள்ஞானத்திற்குச்
சொல்லுஞ்சாதனமென்பரின்னுமகேளாய்
ககனமுதற்பூதசத்துவக்குணத்தின்
காரியமஞானேந்திரியத்திற்குமாகும்
சகம்புகழும்ஞானேந்திபதின்றன்மை
சாற்றுகிறேனவைகேட்டுத்தெளிவாய்நீயே.

### அவதாரிகை.

ஞானேந்திரியத்தின்றன்மை கூறல்

66. புனிதபஞ்சபூதசத்துவாமிசத்திற்
பூதத்திற்கொவ்வொருமாத்திரையெடுத்துத்
தனிதனியாய்வைப்பதுசுரோத்திராதி
தருஞானேந்திரியமெனச்சாற்றுவார்கள்
தொனிமாத்திரந்தெரியுஞ்சுரோத்திரந்தான்
றொடராகாசம்சமதுவானதாலே
கனதொக்குக்காற்றம்சமாதலாலே
கருதுபரிசம்மட்டுமறியுமென்பர்;

67. அக்கினியினம்சமதுசட்சுவாகு
மாதலாலறியுமதுரூபமட்டும்
நக்குசிங்குவையப்புவம்சமாகி
நாடுரசகுணந்தன்னையறிந்துநிற்கும்
தக்கபிருதிவியம்சமாக்கிராணந்
தானதினுற்கந்தமதையறிந்துகொள்ளும்
புக்கைந்துமொன்றொடொன்றுகூடலின்றாய்ப்
போனதினலொன்றுமற்றொன்றின்குணத்தை

68. இரகிக்கவறியாதுட்கருவிதன்னிற்
கிளரைந்துமாத்திரைகளொன்றுகூடி
மருவினதாலைந்திந்தியத்தும்நின்று
வருமைந்துவிடயமதையறியுமென்பர்
விரிபஞ்சபூதசத்துவக்குணத்தின்
வியட்டிஞானேந்திரியமைந்தினோடே
புரியந்தக்கரணமைந்துஞ்சாத்துமீகம்
பொருந்தினதால்ஞானசாதனமாமன்றே

69. உற்பூதமாகாமற்பொறிகலந்தே
யுவந்துவெளிவிடயமறிஞானேந்தியம்
கற்பனைசெய்தொழில்தெய்வந்தானமெல்லாங்
கழறுகிறேன்றெரிநன்றாய்ச்சுரோத்திரத்தில்
சொற்கேட்டறிக்குக்காதுற்றேநிற்குந்
துவக்குபரிசம்வாயுதோலுடம்பாம்
பொற்புசட்சுக்காணுதல்சூரியனேகண்ணும்
பொருந்துசிங்குவைருசித்தல்வருணனுக்கே.

அவதாரிகை

பிராணாதிவாயுவின்றன்மைகூறல்.

70, (10) ஆக்ராணமோத்தலசுவினியேதெய்வ
மறிமூக்காம்பிராணாதிவாய்வைக்கேளாய்
போக்கானவைம்பூதரசகுணத்திற்
பூதத்திற்கொவ்வொருமாத்திரையெடுத்து
ஆக்கவொன்றாய்வியானாதிபஞ்சவாயு
வாகுமதில்வியானனுமாகாசவம்சம்
அக்கினதாலதுபோற்சர்வாங்கமுந்தான்
றொடர்ந்துவியாபித்திருக்கும்பிராணவாயு

71, வாயுவினதம்சமதைப்பெற்றதாலே
வருமிதையந்தனிலிருந்துநாசிமட்டும்
வாயுவபானன்றேயுவம்சமாகி
வளருமக்கினியைப்போலவுட்டிணித்து
மேயகுதந்தனைப்பற்றியுண்டவன்னம்
விரும்புபானங்களைச்சிரணமேசெய்யும்
வாயுசமானன்சலத்தினம்சமுற்று
வாழ்சரீரநடுநாபிதன்னில்நின்றே



72, உண்ணன்னபானமதைநாடிக்கெல்லா
மோடிடவேநீரைப்போலிழுத்துச்செல்லும்
தின்னுதானவ்வாயுபிருதிவம்சஞ்
சேர்ந்துகளமுற்றங்கேகடினமாக
மண்ணைப்போற்கடையுமிவைதவிரப்பஞ்ச
வாயுக்கள்வாந்திசெயுநாகனென்றும்
விண்ணிமைக்கொட்டச்செய்கூர்மனோடு
வெந்துமமற்செய்யுகிரிகரனுமென்றும்

73. கொட்டாவிகொள்தேவதத்தனென்றுங்
குமிழியைப்போல்வீங்குதனஞ்சயனுமென்றும்
திட்டமுடனுளதாகச்சிலர்குறிப்பர்
சிறநதெனச்சொல்சூட்சுமத்தின்பூதம்
விட்டரசகுணச்சமட்டியாலுண்டான
வியானாதிபஞ்சவாயுக்களுக்கும்
கட்டுவிசிட்டன்விசுவயோனிவிஸ்வ
கர்மனயன்சயன்முறையேதெய்வயாமே;

74. பிரபஞ்சனனுமந்தரியாமிமிக்க
பிராணன்வைரம்பன்முக்கியனுமென்று
இரக்தெரிவாயுக்களந்தக்கரணந்தன்னைச்
செய்தொழிற்குட்படுத்துங்காரணமதாக
வருவனவுமுளவென்றுசொல்வாருண்டு
வாயுவியானதியுள்ளேசஞ்சரிக்கத்
திரிநாகனாதிவெளிமற்றையைந்துஞ்
சீவசம்பதத்துளதாமென்றுரைப்பார்.

75, பூதஞ்சேர்ரசகுணத்தினம்சமாகப்
புகலுபிராணனொன்றேதொழிலிடத்தின்
பேதமதாலைந்துவிதவாய்வாமென்று
பேசுமெய்விசாரசாகரமானாலும்
ஆதியாகாசமுதற்பஞ்சபூதத்
தாமிராசதாமிசத்திற்பூதத்திற்குச்
சாதுவுடனெவ்வொருமாத்திரையெடுததுத்
தனித்தானகன்மேந்தியத்தைக்கேளாய்

## அவதாரிகை

## கன்மேந்திரியத் தன்மை கூறல்

76. (11) வாக்காதிகன்மேந்திரியங்கடம்மில்
வாக்காகாசத்தினிடம்வசனம்செய்யும்
தாக்குவாய்வதினிடமாய்ப்பாணிநின்று
தானிடுதலேற்றலையேசார்ந்துபண்ணும்
தீய்க்குநெருப்பதனிடமாய்ப்பாதஞ்செல்லும்
சேரப்பினிடம்பாயுருத்தானின்று
போக்குமலசலம்வெளியிலுபத்தமண்ணைப்
பொருந்தியேசுகம்வரவேபண்ணுந்தானே;

77. பூதாசகுணவியட்டியாலுண்டான
புரைக்கன்மேந்திரியங்கடனித்தேயான
பேதமதால்மறுதொழிலைச்செய்யமாட்டா
பெருமபூதாசகுணத்தின்சமட்டியான
ஓதுவியானுதிபஞ்சவாயுவோடே
வுற்றகன்மேந்திரியங்களைந்துமாகத்
தீதுறுபத்துங்கிரியாசாதனம்மாந்
தெய்வங்கடொழிருனஞ்செப்புவேனே

78. வாக்கதற்குநெருப்புவசனித்தல்வாயாம்
வருபாணிக்கிந்திரனுமிடுதலேற்றல்
தூக்குங்கைபாதம்வாமனனடத்த
றொடருங்காற்பாயுருக்குப்பிரமனாகும்
நீக்கல்மலசலங்குதமேயுபத்தத்திற்கு
நேரியமன்சுகஞ்செய்தல்குப்பமாமே
ஆக்குஞ்சூட்சுமவுடம்பின்சேர்க்கைதன்னை
யறைவனினிநன்றாகத்தெரிந்துகொள்வாய்.

## அ-கை சூட்சுமசரீரத்தின் தன்மை கூறல்.

79. (12) ஆகுமந்தக்கரணங்களைந்தினோடே
யறிஞானேந்திரியமைந்துவாயுவைந்து
ஏகுகன்மேந்திரியமைந்தித்தத்துவங்க
ளிருபதுஞ்சூட்சமசரிரமென்பர்மேலோர்
மோகஞ்செய்மாயையதிற்பிரதிபிம்ப
முயங்கீசுவரனவித்தைப்பிரதிபிம்பத்
தாகங்கொள்சீவர்கொவ்வொன்றுசூட்சத்
தனுவருளப்பூததமகுணமேமிஞ்சும



80. நல்வினைதீவினைப்பயனின்சுகதுக்கங்கள்
நயந்தனுபவிப்பதற்குக்கருவியென்று
சொல்சூக்குமத்தனுவைத்துலக்கிக்காட்டுந்
தூலதனுவோடவையேபெறற்குரித்தாய்
நில்சீவர்தமக்கீசனருளிக்கன்ம
நேர்பலனையனுபவிக்கப்பக்குவங்கள்
இல்லாதசீவருக்குநுண்ணுடம்பை
யேற்படுங்காலங்கொடுப்பதற்கிருந்தார்.

81. சீவகர்மஞ்சஞ்சிதமாகாமியமமுஞ்
செப்புபிராரத்தமெனமூன்றுமுன்னால்
மேவுசென்மங்களிற்செய்துபயனாரம்பம்
விரிவில்லாதாவரணக்கழுஞ்சியத்தில்
வீவதிலாதிருப்பதுசஞ்சிதமிச்சென்மம்
விரும்பிச்செய்தெதிர்காலப்பயனாகாமியம்
தாவுபிராரத்தஞ்சஞ்சிதத்திருந்து
தானெடுத்திச்சென்மமனுபவிப்பதாகும்

## அவதாரிகை

## தூலசரீரத்தின் றன்மைகூறல்.

82. (13) மிஞ்சியதாமதபூதமைந்தையுந்தான்
மெதுவுபடவொன்றிரண்டாய்ப்பகிர்ந்துபின்பு
அஞ்சுபங்கிலொவ்வொன்றைநான்கதாக்கி
யத்தூக்காய்வைத்தபங்குயைந்துதன்னிற்
கொஞ்சமுளநான்கையுந்தன்னம்சம்விட்டுக்
கூட்டிடவந்தனதூலபூதமென்பர்
பஞ்சிகரணம்பண்ணித்தூலபூதப்
பாவனையைவிபரமதாய்ப்பகருவேனே

83. ஆகாசத்திற்பரிசரசமுமரூப
மாங்கந்தநான்குவியாப்பியமதாகிப்
போகுமதிரிசியமாய்ச்சத்தமட்டும்
பொருந்துநிசகுணமாகத்தோன்றிநிற்கும்
வேகவாய்வதிற்பரிசநிசமாஞ்சத்தம்
விளங்குங்காரணகுணமாய்வெளியாய்நிற்க
ஏகுரூபரசகந்தம்வெளிப்படாம
லியம்பதிருசியமாகுமென்பர்மேலோர்

## நானுசிவ வாதக் கட்டளை

84. அக்கினியிலிரசகந்தம்வெளிப்படாம
லதிருசியமாய்ப்போகரூபமட்டும்
மெய்க்குணமாமற்றிரண்டுகுணங்களோடு
வெளிப்பட்டுநிற்குந்தண்ணீரிற்கந்தந்
தங்கிமறைபட்ட திரிசியமாய்ப்போகத்
தங்குரசமுண்மைசத்தம்பரிசம்ரூப
முக்கியமதாய்நிற்குமண்ணிடத்தில்
மொழிகந்தநிசநான்குகுணத்தோடோங்கும்

85. காரணவுண்மைக்குணங்கடோன்றமற்றக்
கருதுகுணமடங்கிநிற்குமியல்பதான;
பாரபூதவ்வியபாரந்தர்மம
பற்றதிதேவதைவிபரம்பகரக்கேளாய்ப்
போதாகாயமிடந்தருதலோடு
பிறங்குவெளிசதாசிவனும்வாய்வுலர்த்தல்
சேருபரிசமகேசன்பாகமாக்கல்
தெரிவெப்பமுருத்திரனுந்தேய்வுக்காகும்

### அவதாரிகை
### தூலசரீத்தின் றன்மை கூறல்.

86. (14) அப்பதுபிண்டீகரித்தனெழ்ச்சியோடே
யறிவிட்டுணுப்பிருதிவதற்குச்சிடா
செப்புபொறுமைக்கடினமபிரமாவாகுந்
தெரியுஞ்சூட்சுமபூதக்கலப்பாலான
தப்பில்லாத்தூலபூதத்தினின்று
தருமாறுதத்துவமாய்நாற்பிறப்பாய்
இப்புவியிற்சாதிமூன்றுயுரைக்கு
மேதுவுளதூலவுடலுண்டாமென்பர்

### ஆறு தத்துவங்கள்

87. (15) ஆறுதத்துவஞ்சருமமுதிரமோடே
யறைமாமிசஞ்சநாயுவத்திமச்சை
தேறுசருமந்தோலுதிரமிரத்தந்
தெரிமாமிசமிறைச்சிசநாயுவென்ப
தூறுநரம்பத்தியென்புமச்சையென்ப
தூறுங்கொழுப்பாமிவையாலாந்தூலதேகம்
கூறுதாய்தந்தையர்கொளுணவிலாறு
கோசதனுவுண்டாகுங்கூர்ந்துபாரே






88. நரம்பெலும்புசுவேதநீர்தந்தைகூறும்
நாடுதோலிறைச்சிரத்தந்தாயதாகும்
தருமமபேர்சாதிநிறஞ்சார்சம்பந்தந்
தருமளவுபிறப்பிறப்புச்சரீரமாகி
வருமிடமாஞ்சுகதுக்கவடிவபோகம்
வளர்சீவனனுபவிப்பதற்குத்தன்னல்
இரியுயிரால்தேவதைபால்பற்றிவந்த
தோத்தியாத்மீகதுக்கம்பின்னும்;

### மூன்றுவகைத் துக்கம்.

89. ஆதிபவுதிகதுக்கமானதோடு
மறையாதிதெய்வீகதுக்கமூன்றஞ்
சாதனமாமித்தூலசரீரத்திற்குத்
தலைவலிகால்வலியாதியாதித்துக்கம்
பேதமுறும்புலிசிம்மம்பாம்பிவற்றால்
பிறப்பதுவேபிறவுயிராற்பிறக்குந்துன்பம்
மோதமிடிபுயலடித்தலாதியைத்தான்
மொழிகடைசித்தெய்வீகதுக்கமென்பர்;

### நால்வகைத் தோற்றம்

90. சராயுசமண்டசஞ்சுவேதசமுற்பீசத்
தாலாகுஞ்சதுர்வகையாந்தோற்றங்கேளாய்
சராயுசமான்மனிதரைப்போற்கர்ப்பப்பையிற்
றங்கிவருமுயிராகுமண்டசத்தைக்
கரைபறவைபாமபிணைப்போல்முட்டையிட்டுக்
காத்திருந்துகுஞ்சுபொறியுயிராமென்பர்
விரவுசுவேதசமவேர்வைதன்னிற்பேன்போல்
வெடிக்குமுயிராமினியுற்பிசதனைச்சொல்வேன்;

91. பூண்டுசெடிமரமிவைபோனிலத்தினின்று
புலப்படுதாவரவஸ்தென்றறிதல்வேண்டும்
ஈண்டுரைத்தவைகளின்றிமானசத்தா
லியங்குசிருஷ்டிப்புமுண்டென்றிசைத்தார்மேலோர்
மாண்டபுலத்தியர்பிருகவ்வர்க்கமாவர்
மருவுகினறசாதிவகைமூன்றேதென்னில்
வேண்டிமமைமறுமைசுகவுணர்ச்சிபெற்ற
மிகுமுத்தமச்சரிரமனிதராமே.

சாதிமூன்றி லுத்தம சாதி விபரம்.

92. இருவினையுஞ்சமமுற்றமிசிரகர்ம
வேதவினாலாமனிதசரீரம்பின்னும்
வருமூன்றுவிதமியாதோவென்றாயானால்
வளர்கின்றநிட்காமபுண்ணியஞ்சேர்
கருமபலத்தாற்சித்தஞ்சுத்தியாகிக்
கருதுஞ்சாதனசதுட்டயத்தைப்பெற்றுக்
குருமுகத்தாலான்மவிசாரணையேசெய்து
கொள்சீவன்முத்திபெறலுத்க்கிருஷ்டம்

93. தனதுநிலைக்குறுகாம்யகர்மஞ்செய்து
சரீரசுகமபேணனடுமிசிரகர்மம்
வினைமிசிரசாமான்யகர்மஞ்சொல்வில்
மிடிபாண்டுகுட்டமுறுசரீரமாகும்
முனம்விட்டமத்திமத்தின்சாதிபட்சி
மூசுபசுவாதியுயிரிகத்துணர்ச்சி
நனியுடைமையாலதன்மச்சாதிதொட்டால்
நல்லுணர்ச்சியுடையசெடியாதியாமே

வேறு.

மத்திம சாதி.

94. மொழியுமிந்தச்சாதிரண்டுமுதற்சாதிதன்னைப்போல
வழிமூன்றுபிரிவேயாகும்வகுக்கிலதுகரடிபாம்பு
கழிபாவவுத்க்கிருஷ்டக்கருமபலனாகுமென்க
எழுபருந்தோடெருமைவர்க்கமேற்றநடுப்பாவகர்மம்

அதன்ம சாதி.

95. குதிரைபசுவானைவர்க்கங்கூறுசாமான்யகர்மம்
இதுமத்திமத்தின்சாதியிரண்டிரண்டாய்மற்றதைக்கேள்
பதிகள்ளிநாகதாளிபலாமரமாமரமியாருந்
துதிவில்வந்துளசியென்றுசொல்லதன்மச்சாதிமூன்றே

96. பிருதிவியாமுலகந்தன்னிஸ்பிறந்துபோற்சாதிமூன்று
பரவப்பேயாதியாலாம்பகர்பிதிருலோகந்தேவர்
நிரம்புலசமியட்சலோகம்நேர்சித்தருலகுமுண்டு
தெரிதேவர்முதலாஞ்சாதிதேர்காமதேனுவன்னம்



97. மத்திமத்தின்சாதிபாகுமதிதேவதருக்களெல்லாம்
தொத்ததன்மசரீரமென்றுசொன்னார்முன்னூலோர்தானே
உற்றதைந்துகோசத்தன்மையொழுங்காகச்சொல்வேன்சீடா
புத்தியாய்க்கேட்டுஞானப்பொருளினைநீயுணர்வாய்நன்றே.

அவதாரிகை.

பஞ்சகோசத்தன்மைகூறல்.

98. மாதூலசரீரமன்னமயகோசம்பிராணனோடு
கோதுகன்மேந்திரியங்கூடக்கோசமயம்பிராணனாகும்
வாதுமனம்ஞானேந்தியமருவமனமயத்தின்கோசம
ஏதுவதாம்ஞானேந்தியமிசையும்புத்தியும்விஞ்ஞான;

99. மயகோசந்தானுமென்பர்மன்னிமித்ததனுவானந்த
மயகோசமாகுமுன்னால்வருந்தூலசரீரத்திற்கு
மயமுண்டாகுதலிருத்தல்மாறுபடலதிகரித்தல்
மயங்குறைதல்நாசமாதல்வழுத்தறுவிகாரமுண்டாம்;

100. அன்னமயகோசத்திற்குள்ளாம்பிராணமயகோசம்
சொன்னவத்தேகத்தின்கட்டாய்த்தொழிலசைதல்முதலாய்நிற்கும்
பின்னமனமயத்தின்கோசம்பிராணமயகோசத்திற்குள்
மன்னியகாமக்குரோதமததமோகலோபமோடு;

101. மாச்சரியமசூயைடம்பமருவியுடம்பதுவும்நானே
ஆச்சென்னும்புத்தியோடுமானமனைமக்கள்பேரில்
தாட்சணியமெனதாமென்றல்தான்விஞ்ஞானமயகோசம்
வாச்சமனோமயகோசத்தைவாளுறைபோலணிந்துகொண்டு;

102. இகபரத்தினறிவுபெற்றேயியங்கும்பாதாதிகேசம்
புகுந்துவியாபித்துக்கர்த்தாப்போன்றிருந்தேயாள்கைசெய்யும
தொகையாமிக்கோசமூன்றுஞ்சூட்சுமச்சரீரமாகும்
தகுமிரசகுணத்தவதைதான்பிராணமயகோசம்

103. ஞானேந்திரியஞ்சேர்நெஞ்சம்நாடுகன்மேந்திரியவிச்சை
தானேசெய்திருத்தலாலேசத்வரசகுணவவத்தை
ஆனமனோமயகோசந்தானுஞ்சத்துவகுணத்தின்
வானவத்தையேவிஞ்ஞானமயகோசமாகுமன்றே.

104. தானுத்மவடிவானந்தந்தரும்பிரதிபிம்பமுற்றுப்
பேனமதாப்பிரியமோதப்பிரமோதவிருத்தியோடும்
ஆனலயமிடமாய்ப்போகமனுபவஞ்செய்போக்தாவாகும்
ஆனந்தமயகோசத்தாலடைதருமமீதாமன்றே.

105. மோதமெனல்பிரியவஸ்துமுன்னிலையிலடையிலாப
வேதுவினுலாம்விருத்தியினியபிரமோதவஸ்தின்
க'தலனுபவவிருத்திகளுனனவிற்புண்ணியத்தால்
சாதாத்மவானந்தத்தின்சால்பிரதிபிம்பஞ்சேரும்

106. கன்மபலபோகநீக்ககாலத்திலாஞ்சுழுத்தி
தன்காரணத்தஞ்ஞானந்தனிலொடுங்கும்விருத்தியென்ற
மன்னஞ்ஞானந்ததின்மயகோசந்தூலதேக
வன்னமயகோசமிஃபமரந்துச்கஞ்சேருந்தானம்

107. பிராணமயகோசங்கன்மம்பெருகுகாரியத்தின்ரூபம்
திரியுமனேமயகோசந்தான்செப்பிச்சாகரணரூபம
விரிஞானமுள்ளகர்த்தாவிஞ்ஞானமயகோசம்மாம்
அருள்போக்தாவடிவமாகும்ஆனந்தமயகோசந்தான்

108. கூசுபுளியம்பழத்தைக்கூடுமூடுதலெதார்த்தம்
வீசுகயிறதனிற்பாம்புவிளங்கிமறைப்பதுவாரோபம்
கோசமிவ்விதத்திற்கத்திகொள்ளமூடுறையைப்போல
பேசுமன்னமயாதியான்மப்பெருமைதனைமறைத்துநிற்கும்

அவதாரிகை.

தூலசரீரத்தில் சூட்சுமசரீரமிருக்குந் தன்மை.

109. வாக்குசிங்குவையிரண்டும்வாயினிற்கும்
வளருதானன்மனதுகண்டமாகும்
ஆக்குபிராணன்புத்தியிருதயத்தி
லடுசமானன்வாயுசித்தம்நாபி
தூக்கபானன்பாயுர்குதம்வியானன
துவக்ககங்காரங்களுஞ்சர்வாங்கமாகும்
காக்குங்கைகால்குயத்திற்பாதம்பாணி
காணுபத்தமூன்றுதனித்தனியேநிற்கும

110. உச்சியிலேதேயுசுவுஞ்சட்சேந்தியம்
ஒக்குகருவிழிநுனியிற்சுரோத்திரந்தான்



மெச்சுகாததனிலாக்கிராணமூக்கில்
விளங்கறுதத்துவதூலதேகந்தன்னிற்
குச்சென்னக்குடிபுகுஞ்சூட்சுமசரீரங்
கொள்சீவன்பிராரத்தமனுபவிப்பன்
நச்சிறுபத்தாறுதத்துவங்கள்கூடி
நாடுங்காரியசரிரமாகிநிற்கும்

அவதாரிகை

சீவபரியாயநாமமும் பிரமபரியாயநாமமும் கூறல்.

சாக்கிரம்.

111. 18, சாக்கிரமாமவத்தைசொல்லிற்கனுச்சுழுத்தி
சார்பிலாதாயிந்திரியஞானத்திற்கும்
ஆக்கதின்வாசனைக்குமாதாரகால
மதற்கிடமேநேத்திரம்வைகாரிவாக்குச்
சாய்க்குந்தூலம்போகங்கிரியைசத்தி
தருங்குணஞ்சத்துவம்பேர்கள்விசுவனேடு
தேக்குவியவகாரிகனென்சீவனுகும்
தேவதைவிட்டுணுவெழுத்தேயஃகானுகும்

112. இந்திரியம்பத்தந்தக்கரணநான்கு
மிதின்விடயம்பதினைகத்தொகையேதெய்வம்
வந்திடுநாற்பத்திரண்டுதத்துவங்கள்
வாய்ந்திடக்காரணசரிரசித்தபாசன்
பிந்துதூலஞ்சூக்குமச்சரீரம்
பிரமாத்துருசரீரிவிஷயிபின்னும்
தொந்தவிட்சேபன்ரூபன்க்ஷேத்திரஞ்ஞன்
றொடருநாமம்மனேகம்பெற்றேநிற்பன்

சொப்பனம்.

113. சொப்பனத்தினவத்தைசொல்லிற்சாக்கிரத்திற்
றோன்றுபதார்த்தங்களதினனுபோகத்தால்
துப்பும்வாசனைமயிரினுனியைப்போல
சூட்சுமமாய்க்கண்டத்துள்ஹிதையென்னுடித்
தப்பின்றித்தங்குமதிற்சத்தமாதி
தருபஞ்சவிஷயமதினறிவுமுன்பின்
செப்புதொடர்பின்றியுளகாலமென்பர்
திரிசீவன்தூலசரீரங்கைவிட்டு

114. தெளியவந்தக்கரணமுடன்றானங்கண்டஞ்
சேர்மத்திமைஇவாக்குப்பிரமன்தெய்வந்
தளிர்குணமிராசதமாமெழுத்துகாரஞ்
சார்சூட்சுமம்போகம்ஞானஞ்சத்தி
களையிராதிபாசிகசிவன்றைசத்தன்
கனவின்கற்பிதனாகும்பேர்களோடு
அளாவுஞ்சூக்குமசரிரத்தின்வியட்டி
யபிமானியெனுநாமமடைந்துநிற்கும்.

## சுழுத்தி.

115. சுழுத்தியவத்தையுரைக்கில்மறதியான
சுகமஞ்ஞானம்பொருந்தியிருக்குங்காலம்
கழற்றிதிற்காரியவுடம்பின்றத்துவங்கள்
கணக்கிருபத்தாறையுங்கைவிட்டுமூல
மழுத்துங்காரணதேகமுற்றசிவ
னுடமிதையந்தானம்பைஇசந்திதான்
வழுத்திடும்வாக்கானந்தம்போகமாகும்
வளர்திரவியஞ்சுழுத்திதமசுபண்பு

116. மகரமெழுத்தேதெய்வமுருத்திரன்றான்
மருவுபிராஞ்ஞனவித்தியோபாதிகன்
பகர்பாமார்த்திகசிவனிவைகடம்மைப்
பற்றிக்காரணசரிரத்தின்வியட்டி
நுகராபிமானிப்பெயரனேகம்பேற்று
நோக்கியற்கைவடிவகூடத்தன்சேர்க்கைச்
சுகாகாரமஞ்ஞானமுண்மைத்தன்மை
சூழ்ந்திடவேயிருப்பனதுதொடர்ந்துபாரே.

117. ஈங்குரைமூன்றவத்தைகளில்விருட்சசாதி
யேற்பதுசிணச்சுழுத்தியென்றுசொல்வர்
ஓங்குமலைபாதிகள்காடச்சுழுத்தி
யுறுமிருகாதிகள்சுழுத்திசாக்கிரத்தை
வாங்குந்தேவர்க்குச்சாக்கிரமேயுண்டாம்
வருமனிதர்மூன்றையுந்தான்பெற்றேநிற்பார்
தாங்குநனுக்கனவந்தக்கரணமேவுஞ்
சாரவித்தைவிருத்திசுழுத்திக்கேயுண்டாம்



## துரியம் துரியாதீதம்.

118. பட்டணஞ்சாக்கிரவவத்தைசொப்பனந்தான்
பட்டணத்திலுள்ளிருக்குங்கோட்டைபோலாம்
இட்டகோட்டையில்வீடுசுழுத்தியாகு
மிவைதவிரமனவழக்கந்தவிர்த்துவாசி
கட்டிமூலக்கனலையெழுப்பியான்மங்
கருதல்துரியம்பின்னப்பிரமந்தன்னி
லொட்டிமனம்லயமாதல்துரியாதீத
மோங்கவத்தைமற்றிரண்டுமுள்ளதென்பார்

## பிரமத்திற்குஆன்மா வேறுபட்டதன்றென்பதும் சீவாத்துமாவும்.

119; காலமிடமிவைகளினால்முடிவில்லாது
கருதுவியாபகவான்மப்பிரமந்தானே
மேலுரைமூன்றவத்தைகளிற்சாக்கிரத்தில்
விண்கடத்தால்வளைவுபட்டவிதமேபோல
தூலமுதற்சரீரங்கள்மூன்றினாலுஞ்
சூழ்ந்திருந்துந்தத்துவத்தின்றொடக்கில்லாமல்
சிலமுள்ளசாட்சிபதாயிருக்குமபோது
சீவாத்துமாவென்றபெயருற்றோங்கும்

## அந்தராத்மா-பரமாத்மர்-ஞானாத்மா-கூடத்தன்.

120. சொப்பனத்திலேசாட்சியாகிநின்று
சூழுவிவகாரமறிசேதனத்தைச்
செப்பந்தராத்துமாவென்றுசொல்வர்
தெளிவில்லாச்சுழுத்திக்குச்சாட்சியாகித்
தப்பாமஞ்ஞானவிருடன்னையோர்ந்த
தனிச்சேதனம்பரமவாத்துமாவாம
முப்பொதவத்தாத்திரையச்சாட்சியானால்
முன்னறிஞானாத்துமகூடத்தனாமே

## அவதாரிகை.

ஈசுவரனது சரீராதிகளைக்கூறல்.

121, (19) தூலபஞ்சபூதங்களவற்றிற்றோன்றுந்
தூலசரீரச்சமட்டிகூடியீசன்
தூலசரீரம்விராட்டென்றேநிற்கும்
சொல்லுமதிலீசனுற்றநனவவத்தை

யாலதற்குவைசுவானரன்பேரோங்கு
மாகுமிர்தவிருவகைக்குமதிட்டானத்தைக்
கோலுஞ்சைதன்னியமேபிரமாவென று
கொள்ளுவரிவ்வுலகிலறிவுடையோர்தானே
122. சூட்சுமபூதங்களைந்துமவற்றிற்றேன் றுஞ்
சூட்சுமசரீரசமட்டியுமீசன்
சூட்சுமசரீரமென்றும்பின்பதற்குச
சொல்லிரண்யகற்பமென்றும்பேர்களோங்கும
ஆட்கொள்ளுமீசனிதிற்கனவவத்தை
யடையுங்காற்சூத்திரான்மாவேயாகும்.
காட்சியிவையதிட்டானசைதன்னியத்தைக்
கருதுவியாபகவிஷ்ணுவென்பர்மேலோர்
123. இருவகைத்தூலச்சூட்சவாசனைக்கு
மிசைமாயையீசன்காரணசரீரம்
மருவவ்வியாகிருதமென்றேயாகும
வருமிதிற்கூடிச்சுழுத்தியவத்தைதன்னை
விருபபீசனந்தரியாமீயாமெனபர்
மிக்கவிதினதிட்டானசைதன்னியத்தைட்
பரவுசமுசாரநோயொழிப்பதான
பான்மையுருததிரனென்றேபகர்வர்நல்லோர்.
124. சிவன்மூவவத்தையிலுமுச்சரீரந்
துகழிருபத்தேழுதத்துவங்களோடு
மேவியதாய்கிற்பதுபோலீசுரன்றன்
மிகுசமட்டிதத்துவங்களிருபத்தாறுந்
தாவுதன்காரணசரிரமாயையொன்றுந்
தாக்காகாயதிபூதஞ்மஞ்சுஞ்சேர்தது
மூவாமுப்பத்திரண்டுததுவங்கள்
மூன்றவத்தையுங்கலந்துநிற்பனன்றே

## பூதத்தன்மை-விராட்டு-வைசுவானரன்.

125. புறவிந்தியத்தாலேயறியுந்தன்மை
பூததிற்குரித்தென்னப்புகல்வதாகும்
பிறிவுபடுசராசரத்தின்வடிவமான
பிரபஞ்சமீசனுறுப்புக்களாகச்
செறிவிருத்தியாலவன்விராட்டாமென்று
செப்புவர்பிராணிகளின்சரீரந்தன்னில்
பெறுநானென்றபிமானம்வைத்தவீசன்
பிறங்குவைசுவானரன்றற்பதமுக்யார்த்தன



## அதிட்டானம்-இரணியகருப்பம்-அந்தரியாமி.

126. முதற்காரணங்கயிறுமதிலேதோன்று
மொழியரவுகாரியமாமாதலாலே
அதிட்டானமென்பதொருகாரியத்தி
லாங்காரணப்பொருளாம்பொன்னிறத்தால்
மதியண்டப்பொருளிரண்யகர்ப்பமென்ற
மகிழிந்திரியவிஷயப்பொருளின்கர்வாம்
சதுர்ப்பூதங்களில்விண்போலீசனுள்ளே
சஞ்சரிப்பதாலந்தரியாமியாமே

## அவதாரிகை.

சூத்திராத்மா-விளக்கமுடன்
சீவசேதனமுதலியவற்றின் விபரத்தைக்கூறல்.

127. (20) விதியீசன்பொருளெவையுந்தனதுசக்தி
விளக்கமதாலியக்குவதால்சூத்திராத்மாத்
துதியவ்வியாகிருதம்பிரமத்தின்கண்
சூடெரியைப்போற்பிரியாதிருக்குமன்றே
பதிசீவசேதனவியாபகத்தைப்
பகரிற்றன்சரீரமட்டுங்கலந்திருக்கும்
சிதாபாசனீசனெல்லாச்சரிரமோடுஞ்
சேருபிரபஞ்சங்களொடுங்கலப்பன்
128. செப்புசிதாபாசனுக்குமீசனுச்குந்
தெரிசாட்சியாமபிரமசைதன்னிபந்தான்
எப்பொழுதுஞ்சகலசரீரங்களோடு
மிபம்புபிரபஞ்சங்களிலுநிறைந்து
அப்பாலும்பத்துத்திக்கதினுமீறி
யதிக்கிரமித்தெல்லையற்றதாயிருக்கும்
இப்புவிச்சீவன்றாலசரீரத்தின்கண்
ணிசையுந்தத்துவவிவகாரத்தைக்கேளாய்

## அ-கை. தத்துவவிவகாரகளைக் கூறல்.

129. (21) அன்னமயகோசதத்துவங்களாறு
பாகுஞ்சூட்சுமசரிரதத்துவங்கள்
பன்னுமிருபதுஞ்சீவனீசனேடு
பகரவித்தைவித்தைபிரமந்தானைந்தும்
துன்றாலசரீரவிவகாரத்திற்காஞ்
சூட்சுமமாஞ்சரீரவிவகாரத்திற்கு
மன்றாலதத்துவங்களாறுநீங்க
மற்றவையாங்காரணசரீரத்திற்கு

130 சீவனிறையவித்தைவித்தைபிரமமைந்தாஞ்
சீவனுக்குச்சீவனீசன்பிரம்மம்
ஆவதாஞ்சாட்சிவிவகாரஞ்சாட்சி
யாமீசன்றாலவுடல்விவகாரங்கேள்
மேவுகின்றசமட்டியன்னமயகோசத்தின்
விரவாறுதத்துவமுஞ்சமட்டியாக
வாவுஞ்சூட்சுமசரிரதத்துவங்கள்
வருமிருபான்சீவனவித்தைஇரண்டும்.

131. ஈசன்வித்தைஇபிரமமூன்றும்பூத
மென்றைந்துந்தத்துவங்கள்முப்பத்தாறே
ஈசன்சூட்சுமசரிரவிவகாரத்தி
லெழுசமட்டிதத்துவங்களிருபதோடு
பேசுசமட்டிசீவனவித்தையுங்தான்
பெருகும்பூதங்களைந்துமீசன்வித்தை
தேசுபிரமம்மூன்றுந்தத்துவங்கள்
திரியுமுப்பதாகுமென்றுசெப்பலாமே.

132. ஈசன்காரணசரிரவிவகாரத்தி
லீசன்வித்தைஇபிரமமூன்றேயென்பர்
ஈசன்விவகாரமீசன்பிரம்ம
மெழிற்பிரமவிவகாரம்பிரமமொன்றே
எசிந்திரீயவிவகாரத்திற்கே
யிந்திரியமொன்றூறுசட்கோசம்மாம்
வீசுதத்துவங்கரணமைந்தேவாயு
மிகுமைந்துசீவனிறையவித்தைவித்தை;

133. பிரமமதோடைந்தாகுந்தத்துவங்கள்
பேசிலிருபத்திரண்டாமென்பர்மேலோர்
கருதுமனோராச்சியத்தினவிவகாரத்திற்
கவருள்ளமனமபுத்திசித்தமபின்னும்
தருமகங்காரத்தோடேசீவனீசன்
தனியவித்தைவித்தைபிரமம்பத்தாகும்
திரிதத்துவத்தோற்றநிலையீதாகுஞ்
சிருட்டிவகைவிபரமினிச்செப்பக்கேளாய்;

சிருட்டிவகை

134. உத்தமமத்திமகனிட்டரென்றுமூன்று
புரைக்குமதிகாரிகட்கஜாதவாதம்
ஒத்தயுகபத்ச்சிருட்டிகிரமமென்றிங்
குணர்சிருட்டியாம்பிரமமுளதுமற்றச்



சுத்துபிரபஞ்சமென்றுமில்லையென்று
சொல்லுமஜாதவ்வாதமுடிவாந்தீர்ப்பே
மத்தியுகபத்ச்சிருட்டிசொப்பனத்தில்
மனதிலுதியுலகம்போற்கிரமமின்றித்

135. தேகாதிப்பிரபஞ்சம்பிரமந்தன்னிற்
றெரிதோற்றமாங்கனிட்டவதிகாரிக்கு
மோகமதாயின்னுலிதுவரைக்கு
மொழிந்தகிரமச்சிருட்டியாகுமுந்திச்
சேருறுவேதாந்தஞ்சித்தாந்தத்திற்குத்
தெளிவஜாதவ்வாதமொப்பென்றாலும்
ஆகாமத்திமகனிட்டரேகவஸ்தை
யறிவதற்குமற்றிரண்டுசிருட்டியாகும்.

அ–கை. தத்துவங்களின் லயக்கிரமங் கூறல்.

136. (22) தத்துவங்களொடுங்கிலயக்கிரமங்கூறிற்
றனியாதிவஸ்துவிடஞ்சத்திதோன்றித்
தத்துள்ளதூலவுடலந்தமாகத்
தழைத்துண்டானதுபோலசகலசீவர்
பெற்றுள்ளதூலவுடலழிந்தாதாரம்
பெறுந்தூலபூதங்களுடனொடுங்கும்
மற்றப்பூதம்பஞ்சீகரணம்விட்டு
மாறித்தாமதகுணபூதங்களாகும்

137. அன்னிலைசூட்சுமபூதமென்னநிற்கும்
அறையுஞ்சூட்சுமசரிரதத்துவங்கள்
மன்னிருபதுந்தத்தங்கட்டுவிட்டு
மதிபூதசத்துவராசதங்களாகிப்
பின்னுமவைமுக்குணபூதங்களாகும்
பிருதிவப்புதனிற்கரைந்தொடுங்குமப்பு
வன்னிதனிற்சுவருமவ்வக்கினிதீபம்போல்
வாயுவினிலேயணையும்வாயுவுந்தான்

138. ஆகாசந்தனிலோயுமவ்வாகாசம்
ஆதாரவிட்சேபசத்தியாகும்
ஆகாசந்தொடுமாலமரமவ்வித்தி
லடங்குதல்போலாவரணம்விட்சேபம்மும்
ஆகும்பின்னோர்சிருட்டிக்கேவித்தாக
வறைமூலப்பிரகிருதிதமகுணம்மாய்
வாகதுமாயையவித்தைகளிலொடுங்கும்
வளரிவைகள்மூலப்ரகிருதியென்னும்

139. விந்துதத்துவத்தொடுங்கும்விந்துதானே
விளங்குசர்ப்பப்பேர்நீங்கிக்கயிறானைப்போல்
வந்ததிட்டானப்பிரமந்தனிலொடுங்கும்
வளருந்தேகாதிபிரபஞ்சமெல்லா
முந்திடுமெய்ப்பொருள்சுபாவமாய்க்கண்டு
முதிர்கவலையிலான்சீவன்முத்தனுமே
பெந்தமாவரணம்ஞானத்தகன்றும்
பிராரத்தமனுபவிக்கச்சஞ்சரிப்பன்.

## ஆரோபமதிட்டானத்திலடங்கும் வகை சீவன்முத்தி-விதேகமுத்தி.

140. கயிற்றரவமதிட்டானக்கயிறுதன்னிற்
கண்டடங்குந்தேகாதிப்பிரபஞ்சத்தின்
மயக்காங்காரணப்பிரகிருதிமெய்போல
வயங்கிடினுமுடிவுபிரமத்தடங்கும்
தியக்குந்தேகாதிகள்பொய்த்தோற்றமென்றே
திடப்பிரமத்தேநிலைத்தல்சீவன்முத்தி
தயக்குபிரமச்சொரூபம்மாய்நிற்றல்
தானுலகந்தோற்றாவிதேகமுத்தி

## அவதாரிகை. தத்துவ வகையைக் கூறல்.

141. (23) முன்சொன்னபடிதோன்றியொடுங்குகின்ற
முயங்குந்தத்துவமுப்பத்தாறைக்கேளாய்
நன்காகும்பூதமைந்துதூலதேகம்
நத்தாறுதத்துவங்களிருபதென்று
பன்னுஞ்சூட்சுமசரீரதத்துவங்கள்
பகருங்காரணசரீரமானமாயை
பின்னவித்தையிரண்டசனுயிரிரண்டு
பேரதிட்டானப்பிரமமொன்றதாமே.

## அவதாரிகை.

## பொதுத்தத்துவங்களின்னதென்றும் சிறப்புத்தத்துவங்களின்னதென்றுங்கூறல்.

142. (34) பூதமைந்துமாயையொன்றுபிரதிபிம்பம்
புகுமீசனென்று பிரமந்தானென்று
காதலுடனிவ்வெட்டும்பிராணிக்கெல்லாம்
காணுபொதுவாகவனுபவிக்கநிற்கும்



ஓதிடுமற்றிருபத்தெட்டினையுஞ்சீவ
னெவ்வொன்றுந்தனித்தனியேயனுபவிக்கு
மாதீசன்றனையறியாச்சமயத்தோர்கள்
மாறுபலபேருருவஞ்சொலித்துதிப்பர்.

## வாமதேவர் சுகர் முத்தி மார்க்கம்

143. பரவாமதேவர்சுகர்தேவமூல
பாதமுளதத்துவஞானிகளேயாவர்
மருவிவர்கள்முத்தியடைவழியிரண்டாய்
வகுத்ததிற்சுகர்மார்க்கமனுசரிப்போர்
திரியிந்தத்தேகமதுபோனபின்பு
சேருசத்தியோமுத்தியடைவோராவர்
பரிவாமதேவர்தாங்கிரமமுத்தி
பலஜனனம்யோகஞானத்தாற்சேர்வர்.

144. தெய்வத்தாலாகுமிம்மார்க்கங்கடம்மைத்
திரிபட்சியூரெறும்புமார்க்கமென்று
உய்வழிதேர்மானிடர்க்கிங்கிரண்டாய்ச்சொல்வ
ரொன்றுபட்சிகுறித்தவிடம்பறந்துசெல்லும்
மெய்ம்மையைப்போற்றேகத்தைச்சீவன்விட்டு
விரும்புமுத்தியடைகுவதாமற்றுமொன்று
நொய்யெறும்பூர்வதுபோலபலஜன்மத்தி
னோன்புதவத்தாலடைவதாகுமுத்தி.

## அவதாரிகை.

## முப்பத்தாறுந்தத்துவம் ஆன்மவடிவமென்பதுகூறல்.

145. (25) ஆறாறதத்துவத்திலொன்றதாகு
மான்மவடிவச்சிவமேகடத்தைப்பார்ப்போன்
வேறாகியிருப்பதுபோற்றத்துவங்கள்
விளங்குமுப்பத்தைந்தினையும்புறம்பிருந்தே
யாறுதலாய்த்தோறிவாமென்றேயோர்ந்தே
ஐம்பூதமாயையீசனாமேழும்
மாறுதன்னியமெனக்கேயென்றுநன்றாய்
மதித்தறிந்தேன்மற்றிருபத்தெட்டையுந்தான்;

146. தானுமென்றுந்தனக்கன்னியமாமென்றுஞ்
சாற்றிலிருட்டாதித்தன்றன்மைபோல
ஆனதலால்விளங்கவில்லையறிவுசற்று
மல்லாதமுழுமூடனெனினுமன்பால்

ஞானகுருவேதெளிவாயுரைப்பீரென்று
நற்சீடன்மிகவணங்கிவினவலோடும்
மோனநிலைவழாதொழுகுங்குருவுஞ்சீடன்
முகநோக்கிபெதார்த்தநிலைமொழியலுற்றார்;

147. மாதவர்தேர் "தான்" என்பதிரண்டாமுண்மை
மயக்கமெனச்சாட்சிசைதன்யத்தைமேலோர்
ஓதுதானென்னலுபசாரமல்ல
வுயர்வாகும்பரமார்த்தவுண்மையென்பர்
தீதிருபத்தெட்டினையுந்தானேயென்றல்
தெரிகட்டையிற்கள்ளன்பழுதைப்பாம்புத்
தோதுமயக்கம்மதனல்விசாரஞ்செய்து
தொல்லையொழித்துண்மையைநீதொடர்ந்துநிற்பாய்.

## பஞ்சகிருத்தியம்.

148. நின்றுதவநிர்விகற்பசமாதிமூலம்
நேர்பிரமந்தனையறிவோன்சீவன்முத்தன்
நன்றாகுஞ்சிருட்டிதிதிசங்காரம்மு
நாடுதிரோபவமுமனுக்கிரகமென்ன
ஒன்றுபஞ்சகிருத்தியத்தில்முன்னாமூன்று
முடற்குரியபின்னிரண்டுஞ்சித்திற்காகும்
மன்றீசன்துஷ்டரைச்சங்காரஞ்செய்து
மன்சிட்டரைக்காக்கும்விபரங்கேளாய்,

## தசாவதாரம்.

149. மச்சங்கூர்மவராகநாரசிங்கம்
வாமனன்பரசுராமனேடிராமன்
மெச்சுபலராமனேடுகண்ணன்கற்கி
மேவுமவதாரங்கள்பத்தேயன்றி
இச்சைநரநாராயணன்கபில
னென்றனந்தவடிவங்கள்காலதேசம்
வச்சபடிகொளுமீசனிச்சையாலே
மற்றவைபோற்கருமத்தின்பொருட்டாலன்றே;

## தூலசரீர தருமம்.

150. சொற்பிரமக்ஷத்திரியவணிகரோடு
சூத்திராமென்றுசொலுஞ்சாதினன்கு
கற்றிடுமாணுக்கன்சமசாரபந்தன
கனவானப்பிரத்தனெடுசன்னியாசி



நிற்குமிவைநான்குநிலையாண்பெண்ணங்கம்
நிறஞ்சிவலைகட்டைநெட்டைக்குணங்களாமும்
பொற்புபருத்தலிளைத்தல்விகாரமெல்லாம்
பொதிதூலசரீரதருமங்களாகும்;

## சூட்சுமசரீரம்-காரணதேகம்-சீவன்-விபரம்

151. காண்டலாதியாயுள்ளதொழில்களெல்லாங்
கருதுஞ்சூட்சுமசரீரத்தரும்மம்
ஆண்டதுகாரணதேகத்திற்கஞ்ஞான
மறிதல்சீவனுக்குள்ளதருமமாகும்
பூண்டிடுமூச்சரிரமொடுசீவன்றானும்
புகலிவைகளின்றருமந்தத்துவங்கள்
தூண்டிருபத்தெட்டெல்லாமத்தியாசந்
தொடர்ந்தறியிலான்மாவுக்கின்றென்றாகும்.

## அத்தியர்சம்

152. அத்தியாசம்பிராந்திஞ்ஞானம்மா
மதிற்றோன்றுமித்தைவத்துதன்னினின்று
அர்த்தாத்தியாசம்ஞானத்தியாச
மாகுமிருவகைவிபரமறிவாய்சீடா
சுத்துகயிற்றிற்பாம்பர்த்தாத்தியாசஞ்
சொல்லிதிலாம்ஞானமஞானத்தியாசம்
உற்றவிரண்டிலர்த்தாத்தியாசமாறு
யோங்குங்கேவலசம்பந்தாத்தியாசம்;

153. சம்பந்தசகிதசம்பந்தியத்தியாசந்
தருங்கேவலதர்மாத்தியாசத்தோடு
பம்புதர்மசகிததர்மியத்தியாசம்
பரவன்னியோன்னியாத்தியாசபின்னும்
நம்பன்னியதாத்தியாசமென்ன
நவிலவரதிலொன்றுக்குவிபரங்கூறில்
அம்பரத்தின்வளைவில்வான்சம்பந்தம்போ
லநான்மாவிலான்மசம்பந்தம்மேயாகும்

154 கயிற்றினிடம்பாம்பின்சம்பந்தம்ரூபங்
கற்பனையாய்க்கலந்திருத்தல்போலான்மாவில்
பொய்யான்மரூபமிவையிரண்டுங்கூடிப்
பொருந்துதலிரண்டாவதத்தியாசம்

மெய்யிளைத்தல்வெழுத்தலொடுபார்வைகேட்டல்
மேவுஞ்சூட்சுமசரீரதருமமெல்லாம
மையலொடுதனதென்னலாத்துமாவில்
மருவுமூன்றாமத்தியாசமாகும்;

155. கர்த்தாநான்போக்தாநானென்றவந்தக்
கரணத்தின்றருமங்களான்மாவிற்குச்
சுத்திரசிதம்போலகின்விகார
சொருபகற்பனையுநான்காமத்தியாசம்
பத்தக்காய்ச்சியவிரும்பினிரும்பின்றன்மை
பகருநெருப்பதுதனிலும்நெருப்பின்றன்மை
மற்றந்தவிரும்பினிலுமிருத்தல்போல
வயங்கான்மாநான்மாவில்மாறிமாறி;

156. இருத்தலேயைந்தாமத்தியாசஞ்சத்து
வியம்புசித்தோடானந்தமத்வைதத்வம்
உரித்தான்மாவிற்கசத்துச்சடமுந்துக்க
முபயசகிதத்துவமநான்மாவிற்குச்
சுருத்துளவைகயிற்றாவின்சொருபமபோல
சொல்லானமாவில்லநான்மச்சொரூபம்
உரைத்திடாறாமத்தியாசமாகு
மோங்கியவைசொரூபசஞ்சர்க்காத்தியாசம;

157. என்றிரண்டாமவைகளிற்சொரூபாத்யாச
மியம்பக்கேள்தத்துவஞானத்தினாலே
நின்றுபொய்யெனறுணர்வத்தாஞ்சர்ப்பந்தானே
நேரத்திட்டானக்கயிற்றிற்சொருபமபோல
ஈன்றுடலாதிப்பிரபஞ்சங்களெல்லாங்
காணுமமுழுவடிவாய்த்தோன்றுமன்றே
பொன்றலிலான்மாவநான்மாச்சம்பந்தம
பொருந்துதல்சம்சர்க்கத்தியாசமாகும்;

### அ-கை. பந்தமோட்சங்களின் காரணத்தைக் கூறல்.

158 (26) சருவதுக்கநிவர்த்தியொடுபரமானந்தந்
தருபிராப்தியேமோட்சவடிவமென்னும்
பிரமமேதானென்றுமுப்பத்தைந்தாய்ப்
பேசுந்தத்துவங்கடனக்கன்னியமென்றும்
பிரிவறியாமூடாகங்காரந்தன்னாற்
பெண்டுபிள்ளைபடுந்துயரந்தனதாமென்று
பரிதவித்தற்போற்றத்துவம்பிரண்டு
பத்தெட்டின்றொழிலையுந்தந்தொழிலாயெண்ணி



159. மயங்குவதாற்புண்ணியபாவத்தழுந்தி
மருவுங்கன்மப்படியேபிறப்பிறப்பு
முயங்குசமுசாரமடிபட்டேநிற்பர்
மோதுமிவைகளைத்தள்ளிமயக்கநீங்கிச்
சுயம்பிரமசைதன்யந்தானேயென்று
சொல்லுதிடம்பெறறவனேமுத்தனாகி
நயகுணாதீதன்பகவத்ப்பக்தன்மீவர்
ணாச்சிரமிதிடப்பிராஞ்ஞன்பிராமணனாம்

160. நானாரிப்பிரபஞ்சமென்பதேது
நவில்பிரயமெத்தன்மைத்தாகுமென்ன
ஆனாய்நீயதுவென்றத்துவமசியி
னரும்பொருளையுங்குருவினருளாலாய்ந்து
நானேமுற்பிரமசேதனத்தின்ரூபம்
நாட்டுலகஞ்சடவடிவமென்னையன்றி
யானதிரிகாலத்தும்பிறிதொன்றில்லை
யான்மவடிவென்னிடத்திலுலகமியாவும்

161. பழுதையிற்பாம்பதுபோற்கற்பனையாமென்று
பகுத்தறிந்துதிடம்பேற்றோன்முத்தனாமே
தொழுமிவனேபிராமணனுமற்றோரெல்லாந்
தோன்றியுமேபயனடைபாத்தொழும்பாவர்
ஒழுகுஞ்சாதனநான்கையுடையோர்யாரு
முறுந்தேசஞ்சாதிவிகற்பங்களின்றிப்
பழுதில்விசாரணைசெய்துமோட்சவாழ்வைப்
பற்றலாமென்றுரைத்தார்மறைவல்லோரே.

### அவித்தை-வித்தை-சாட்சி-சீவன்முத்தன் இவைகளின் பொருள்.

162. சொல்லவித்தையஞ்ஞானம்வித்தைஞானந்
தொடாரந்தக்கரணத்துபாதியாகி
நில்லுசேதனஞ்சாட்சிநன்மைதீமை
நேற்றின்றென்விகற்பமபிமானம்விட்டுச்
செல்லுதல்சேருதல்புதுமைநினைத்தலின்றித்
திரிந்தெதற்குநடுவுநிலைக்காட்சியாகித்
தொல்லுலகிற்பாமானாய்த்தோற்றங்காட்டிச்
சொருபநிலைத்திடம்பெற்றோன்சீவன்முத்தன்.

## திடப்பிரஞ்ஞன்-அதிவர்ணாச்சிரமி-குணாதீதன் பிராமணன் விபரம்.

163. நிலைத்தவறிவுடையோனே திடப்பிரஞ்ஞன்
நேரதிவர்ணாச்சிரமிவருணத்தோடு
நிலைத்தாசிரமங்கடந்தோன்குணத்ததீதன்
நின்றசத்துவாதிகுணமொழித்தோனாகும்
பலப்பிரமம்பூதந்தனிடத்திற்காண்டல்
பரவுபகவத்பத்தியாகுமென்பர்
நலப்பிரமந்தனைஞானத்தாலறிந்து
நற்சூத்திரமாய்த்தரித்தோன்பிராமணனே.

## ஞானபூமிகள்

164. ஞானநிலையடைவதற்குச்சாதனங்கள்
நான்குமுடையோனெனினுஞ்சுபேச்சையோடு
மானவிசாரணைதனுமானசியேசத்து
வாபத்தியசஞ்சத்திபதார்த்தாபாவம்
வானாகுந்துரியமதாய்நின்றுஞானம
வழங்கேழுபூமியையுநதெரிந்துநன்றாய்
யோனநிலையடைதல்முக்கியமாமெனபர்
முற்றுமவைகளின்விபரம்விளம்பக்கேளாய்

165. சுபம்விரும்பலெனும்பொருள்கொள்சுபேச்சைதன்னைத்
தொடர்ந்தறியவிரும்பித்துர்ச்சங்கம்நீங்கல்
உபநிடதங்குருவருளால்சித்தசத்தி
னுண்மைவடிவறிதலவிசாரணையேயாகும்
தபுமனதுகுறைதனுமானசியேசித்தின்
றன்வசத்தில்மனமடங்கிநிற்றலென்பர்
அபிமானமுண்மையறிவுதித்துநிற்ற
லாஞ்சத்துவாபத்தியனுபவத்தில்

166. சடவாசனையைவிட்டுச்சித்தின்வாசந்
தனையடைதலென்பரச்சித்துதையந்தன்னால்
சடபாவநீங்கலசஞ்சத்தியென்னுஞ்
சங்கற்பமறல்பொருளாபாவனைக்கே
திடசித்திலானந்தமுதையமாகத்
தெரியுமிரண்டற்றுத்தானாயிருத்தல்
விடாதிவனுபவமென்றுமுள்ளதாகு
மேற்றுரியமதுவேழாம்பூமியாமே



## ஞானபூமியேழுமைந்தவத்தையிலடங்கல் அஞ்ஞானபூமியேழுமூன்றவத்தையாதல்.

167. மொழியுமவைகளில்மூன்றுசாக்கிரத்தில்
முடியுஞ்சொப்பனநான்குசுழுத்தியைந்தே
வழிதுரியமாறாகுந்துரியாதீதம்
வருமேழுமேயவத்தையைந்ததாகுங்
கழிவஞ்ஞானப்பூமிசாக்கிரத்திற்
காணனவுநனவுமகாநனவதோடு
விழிகனவுநான்குகனாக்கனாநனவ்வாம்
விழற்சுழுத்தியேழுமவத்தைமூன்றாமே.

## சைவசித்தாந்தப்படி தத்துவம்-யோகமுதலியன.

168. உரைத்திடும்வேதாந்தமன்றிமதிமந்தத்தோ
ரோங்குசைவசித்தாந்தம்பரமவஸ்தைத்
திரப்படுநற்பதிபசுபாசங்களென்று
செப்புவதோர்வழிவேறேயுண்டென்பார்கள்
கருத்துடையோரிரண்டையுமொன்றென்றுகொள்வர்
கருதிடிலோபதியறிவாம்பகுத்தறிந்த
தாத்துடையததுசிவன்பாசமென்று
சாற்றலுடலிதுவதுவாந்தன்மைத்தாமே;

169. பூதமைந்திந்தியம்பத்துத்தொழில்கள்பத்துப்
பொருந்தறிவொன்றுடன்கரணம்நான்காம்நாடி
யோதுபத்துவாயுபத்தாசயங்களைந்தோ
டொழிக்குங்கோசங்களைந்தாதாரமாறு
தீதில்மண்டலந்தோஷமலங்குணங்கள்
செப்புமேடணைவகைக்குமூன்றதாகும்
சூதுவிராகங்களெட்டுவினையிரண்டு
சொல்லவத்தையைந்தெண்ணாந்தொண்ணூற்றாறு ;

170. தத்துவங்களுளவெனவுஞ்சிலநூற்சொல்லுந்
தகுதியுளவின்னூலிற்றுலக்கிக்காட்டாத்
தத்துவங்களிடைகலைபின்கலைசுழினை
சங்கினிசிங்குவைபுருடனேகாந்தாரி
அத்திருவலம்புடையோடாகும்பத்தே
பாசயங்களமாசயஞ்சலாசயம்முஞ்
சுத்துமலாசயஞ்சலஞ்சபாசயம்முஞ்
சொற்சுக்கிலாசயம்மோடைந்தாமென்பர்;

171. தொடர்மூலாதாரஞ்சுவாதிட்டானஞ்
சொல்லுமணிபூரகமனாகதம்மோ
டடர்விசுத்திபாக்கினையாதாரமாறு
மக்கினியாதித்தமதிமண்டலங்கள்
படர்வாதபித்தசிலேத்துமதோடங்கள்
பதிதாரபுத்திரர்த்சேடணைமலங்கள்
விடுமாணவகாமீயமாயையென்று
விளம்புமிவைகளைத்தள்ளியுண்மைமேவும்.

மோட்சம்-சமாதி-இராஜயோகவாசியடக்கவிபரம்.

172. மோட்சமதுவிதுவெனலற்றறிவாய்நிற்றல்
மூற்றுசச்சிதானந்தபபிரமந்தனனில்
தாட்சியிலாமனங்கரைந்துசகலதத்திற்குஞ்
சாட்சியதாயிருந்துபழகலசமாதி
ஆட்சிசெயுஞ்சுவாசமதடங்குஞ்சித்தி
யடையலாமதின்விபரமறையக்கேளாய்
காட்சிகொளுமனிதருக்குச்சாதுவான
காலமுயிரரான்பதங்குலத்திலோடும்;

173. போசனஞ்செய்யும்போதும்பேசும்போதும்
புகல்பதிமூன்றரைநடக்குமநடக்கும்போத
வீசுபதினெட்டாகுமோடுங்காலம்
விளங்கிருபத்தஞ்சரையாஞ்சம்போகத்தில்
நாசமடையும்நாற்பதமெட்டேமுக்கால்
நன்றுரங்கப்பொழுதெழுபத்தைந்தேயாகும்
ஆசகலமுன்புகல்சமாதிமூல
மடங்குயிரின்வகைவிபரமறைகுவேனே;

174. விடயமதடக்கிலெட்டேகாலதாகும
விளங்குசமாதிதனிலேழரைகடாட்சத்
திடவாக்குண்டாமாறேமுக்கால்தனனிற்
றிரிகாலவிஷயங்காலாறிற்ரூன்றும்
நடமதஞ்சேகால்ஞானதிருஷ்டியுண்டாம்
நாலரைக்காகாசகமனங்கைகூடும
அடுநிமையினளவுலகுபத்துநான்கு
மடைந்துவிடலாமூன்றேமுக்கால்தன்னில்;

175. அங்குலமூன்றேடவட்டமாசித்தாகு
மாக்கலாநவநிதியமிரணடேகாலில்
தங்கானமாவொன்றரையிற்காணலாகுந்
தயங்குயிர்முக்கால்தன்னிலீசனுகி



மங்குநிழற்சாயைமறைந்தடங்கிநிற்கு
மன்னுயிரடங்கினிருவாணமாகும்
இங்கிந்தநிலையாமிராஜயோக
வேதுவினுற்பசிதாகஞ்சிரமநோய்கள்;

176. மரணமில்லைச்சிவமயமாம்நெருப்பாற்காற்றால்
மழைச்சலத்தால்விடயத்தாலபாயமில்லை
தெரிவெகுதூரம்மலைமாருதமேபோல
தேகமதிற்றேஜசுவாசனைகளுண்டாம்
வருகாற்றேடாகாரஞ்சலமூன்றுகும்
வகைதேவையில்லைப்புண்ணியபாவங்கள்
தருவினைகளறுமோட்சப்பதவியென்றுஞ்
சார்ந்துமனமகிழ்வடைந்துவாழலாமே;

177. இந்தவிதஞ்சித்திகளையடைவதற்கிங்
கீராறங்குலமோடுஞ்சுவாசந்தன்னில்
மூந்திடுநான்கதுகழியுமெட்டுட்புக்கு
முனையறிந்தன்னுன்குகழியாமற்கட்டிச்
சிந்தைவசப்படச்செய்யவேணுமென்றஞ்
செப்பெட்டோவியென்றுங்கழியுநான்கு
அந்தமுளமதியென்றுஞ்சுவாசமோடி
யகலாமலிருநாசிவழியடைத்து;

178. ஒருவழியிலேற்றுவதோவியிற்சந்தா
னுற்றடையுமார்க்கமென்றுமியோகநூல்கள்
விரிவாகவுரைப்பதினலவைகட்கெல்லாம்
வெகுசுருக்கங்கீழ்விளம்பிராஜயோகம்
சரியானவழியதில்நீமனநிறுத்திச
சதாகாலமனுட்டானஞ்செய்தாற்சீடா
டரியும்வசப்படுஞ்சொன்னசித்தியெல்லாம்
பற்றலாங்கூற்றுவன்றன்பயமுமன்றே.

வேறு.

179. ஆனைமுகனைத்தெரிசித்தாஞ்சாதனங்களடையொருநற்சீடன்
நாஞசிவவ்வாதக்கட்டளையாமின்னூலைஞானமுற்ற
மோனகுருவாலுணர்ந்துசித்தசுத்தியுளனுகிமொழிநற்சாந்தப்
போனகமோர்நாளிலொருவேளையரைவயிறுண்டுபொருந்துதண்
[ணீர்;

180. கால்வயிறுய்மற்றொருகாற்காலியுடன்கருத்தடருங்கவலைநீக்கிச்
சேலுலவுநதிமருங்ககிலலதுகுளஞ்சோலையதுசேருந்தான
மாலகலவேதனித்தாசனமபொருந்திமதிமூலந்தன்னிற்றோன்றுங்
காலெழுப்பியொருமனுவால்நடுமூக்கிலிருநயனங்கருத்துமொன்று

181. படநிறுத்திலிருடோன் றுமதனையுற் றுற்றேபார்க்கிற்பரத்தின்கூறு
சுடர்தோன் றுமதன்பின் னூற்றோற் றுகின்றதோற்றமெல்லாந் [ஞ
[தொடர்ந்துபார்த்துத்
திடமுடனேசொல்லுதற்குநாவுளதோ திக்கெங்குஞ்சோதியென்
இடமுளதோபொருளுளதோவிசைப்பதற்கெவ்வுலகினுமே [றுல்
வேறு. ]யில்லைமாதோ.

182. இனையதாமரியநூலையியற்றினோர்கற்றோர்கேட்டோர்
மனமொடுபடிக்கச்சொல்லிமானிதியன்பாலீய்ந்தோர்
தனதனுப்புவியில்வாழ்ந்துதத்துவஞானமுற்றுப்
புனிதராய்ப்பிறப்பிறப்பைப்பொருந்திடாருண்மைநன்றே.

## கருகன்மொழி விளக்கம்.

1. அசங்கம்—கூட்டமின்மை.
2. அதிரிசியம்—இந்திரியவிஷயமாகாமை.
3. அத்தியாரோபம்—ஒருவஸ்தைமற்றொருவஸ்தாய்க்காட்டல்.
4. அந்தம்—கிரகியாபலிநத்தல்.
5. அபவாதம—விரிவொடுக்கியுண்மையையுணர்த்தல்.
6. அவிச்சை—அஞ்ஞானம.
7. அவித்தை—சிவகாரணசரீரம்.
8. உற்பூதம்—வெளிப்பட்டுத்தோற்றல்.
9. கேவலம்—சுழுத்தி.
10. சகலம்—சொப்பனஞ்சாக்கிரம்.
11. சமுதாயம்—கூட்டம்.
12. சூத்திரம்—பூணூல்
13. திரிபுடி—காண்பான், காட்சி, காணப்படுபொருள்
14. பகல்—சூரியன்.
15. படுத்துவம்—தெளிவுசுருசுருப்பாய்க்கிரகித்தல்.
16. மந்தம்—சொற்பமாய்க்கிரகித்தல்,
17. மிசிரம்—புண்ணியபாவம்சமமடைதன்மை.
18. விசிரிம்பிதல்—வெளிப்படல் மூடல்
19. வித்தை—ஈசன் காரணசரீரம
20. வியாபகம—சுயதன்மை எங்குநிறைவு
21. வியாப்பியம—வெளிப்படாதடங்கல
22. ஆனைமுகன்: ஆன்-பசு, ஐ-கடவுள், முகன்-சந்திப்பு
23. இறை—ஈசன் [முறையே, சிவன் பதி பாசம்.
24. உயிர்—சீவன்






உ

ஓம் கணேசாய நம:

# பஞ்சபட்சித் தொழில் விளக்கச் சுருக்கம்.

காப்பு.

உலகுபுகழுமுமையாள்புதல்வன்
பலனுதவத்திமுகன்பாதந்—திலகம்
படிமேற்பொருந்தப்பணிந்துபறவை
நடனத்தொழிலுரைத்தேனன்று

## பூர்வம், அமரம், பட்சமிரண்டிற்கும்

பகலிராத்தொழில்முறை விளக்கும்-ஆதிப்பா.

ஊணடையரசுநித்திரைமரணமுயர்பகலிரவினிலுண்டு
நீணிலத்தரசுசெய்துபின்செத்துநெறியுடனடந்துமேயரங்கும்
பூணுறுமமரபக்கநற்பகலூண்பொன்றியுந்துயின்றரசாகிச்
சேணுறுநடையுண்டுரங்கியேசென்றுஞ்செத்தரசாளுநல்லிரவே.

### தினநாமப்பட்சிகள்.

1. அ- வல்லூறு
2. இ- ஆந்தை
3 உ- காகம்
4. எ- கோழி
5. ஒ- மயில்

வாரம் 7ல் செவ்வாயாதி சனிவரை யைந்துநாட்களிலும் ஐந்து பட்சிகளும் முறையே ஊணுதியாக நடக்கும. நின்ற ஞாயிறு திங்கட்களில், ஞாயிறு செவ்வாயோடும் திங்கள் புதனோடும் பூர்வம் நடக்கும். அமரத்திற்குத் திங்கள் சனியுடன்சேரும்.

### நட்சத்திரப்பட்சிகட்குக் குறள் வெண்பா.

ஆதியைந்தாறுகுமைந்தைந்தாறுகுமே
நீதிநட்சேத்திரங்க ணோர்.

### திசைப்பட்சி.

| பூர்வம், | அமரம் | உவாக்காலம் |
| --- | --- | --- |
| அ | அ | உ |
| எ ஒ இ | இ எ உ | எ அ இ |
| உ | ஒ | ஒ |

குறிப்பு:- உச்சி கிழக்காக வலமாய்ப் பார்க்க. நடுவெழுத்துக்கள் சந்துகளைக்காட்டும்.

## பட்சிகளின் ஊணுதித்தொழில் வாக்கியங்கள்.

**பூர்வம்**

தாதிபூவேதோ:-பகலில் வரிசைக் கிரமமாயூணுதித்தொழில்கள் வலமாய் நடக்கும்.

அதேதோகாணீ:-இரவில் வரிசைக் கிரமமாயூணுதித் தொழில்கள் இடமாய் நடக்கும்.

**அமரம்**

எதுகீவாதோ:-பகல் இடையொன்றுவிட்டொன்று வலமாய் நடக்கும்

ஆதிநூலோதே:- இரவு இடையொன்றுவிட்டொன்று இடமாய் நடக்கும்.

## படுபட்சி.

பகல் ஊண்பட்சி 5-ம் நாள் மாணம். (இரவு பகல் 60நாழிகையும்)

## பட்சிகள் நட்புப்பகைப் பாக்கள்

ஐங்கோணமிட்டேயகரமுதலாய்வலமாய்த்
தங்குமேயீவோவுந்தானுவ்வுந்—திங்கள்
வளர்போதடைக்கவருநடுவிரோதந்
தளர்விவடிநட்பாகுந்தான்.

**பூர்வம்**

அ
உ எ
ஒ இ

வளர்பிறைக்கோணத்தில்வருமிகரமோடு
வளமதுகாந்தன்னைமாற்றத்—தெளிவிலாத்
தேய்பிறைக்கேமுன்போற்செப்புபகைநட்பென்ப
ராய்மறைதேர்வல்லோரறிந்து.

**அமரம்**

அ
இ எ
ஒ உ

☞ பட்சிகளின் அந்தரம், சூட்சுமந் தெரியவும், மற்றப்பலன்கள் அறியவும் அகஸ்தியர் பட்சிசாஸ்திரம் பொருந்தும. மூப்பதுவயதுக் கிடையில் நட்சத்திரப்பட்சியும் அதற்குமேல் நட்சத்திரப் பட்சியோடு பெயர் பட்சியும் பார்க்கவேண்டும்.



